


# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை

SHIVAJI
TAMIL WEEKLY
29th year
of Publication
*
26—7—1964

அரசியல், தொழில் வள, சமுதாய நல, கலை, இலக்கிய வார இதழ் ♦ ஆசிரியர்: திருலோகசீதாராம்


# ஜனநாயக சோஷலிஸ வாரம்

## காமராஜ் பிறந்தநாளை முன்னிட்டு தமிழகமெங்கும் திருவிழா.

★

## வரலாறு கண்டிராத முறையில் சென்னை நகரில் விழாக்கோலம்.

★

## ஊர்வலங்கள், கருத்தரங்கு, கவியரங்குகள் கோலாகலம்.

★

காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ காமராஜ் பிறந்த நாளை ஜனநாயக சோஷலிஸ வாரமாகக் கொண்டாட முடிவு செய்த தேச பக்தர்கள் பாராட்டுக்குரியவர்கள். இப்படிப் பிரம்மாண்டமான ஒரு விழாவைக் கொண்டாடுவது என்பது மற்றொரு முறை நினைத்துப் பார்க்க முடியுமா என்பது சந்தேகம். அத்தகைய பேரார்வமும், ஆரவாரமும் கரைபுரளப் பதினைந்து லட்சம் மக்கள் சென்னை கடற்கரையில் நிறைந்துவிட்டார்கள். மாவட்டங்கள்தோறுமிருந்து கார்கள், பஸ்கள், ரயில்களில் வந்து குவிந்த மக்களை லட்சக் கணக்கில் இருப்பார்கள். 19-ந் தேதி நடைபெற்ற கடற்கரைப் பொதுக் கூட்டத்தில் தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் திரு. ரா. கிருஷ்ணசாமி நாயுடு அவர்கள் அரியதொரு வரவேற்பைக் கவிதையாகவே இயற்றிப் பாடினார்.

தமிழகம் முழுவதிலுமிருந்து வந்துள்ள மக்களை ஒவ்வொரு மாவட்டத்தின் தியாகச் சிறப்பையும் குறிப்பிட்டுப் பாராட்டி வரவேற்ற போது, நெடுநாட்களுக்குப் பிறகு தேசீயத் திருவிழாவொன்று நடக்கிறதென்ற சூழ்நிலை பளிச்சென்று தெரிந்தது.

### ஜூலை 15 புதன் கிழமை

15-ந் தேதி விழாத் தொடக்க நாளன்று மீனம்பாக்கம் விமான நிலையம் வந்திறங்கிய தலைவரை வரவேற்பதற்குச் செய்திருந்த ஏற்பாடுகள் பிரமாதம். நூற்றுக்கணக்கான கார்கள் அணிவகுத்து முன் செல்ல, தலைவர் பவனி வந்தது கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. வழி நெடுகிலும் ஒவ்வொன்றும் மூவாயிர ரூபாய்க்கும் மேல் செலவிட்டு அமைக்கப்பட்ட அலங்கார நுழைவாயில்கள் பழம் பெரும் தேச பக்தர்களின் உருவப் படங்களைத் தாங்கி நின்றன. இந்தத் தோரண வாயில்கள் சென்னை நகரின் நெடிய மவுண்ட் ரோட் சாலையை ஒரு கனவுலகம் போல ஒளி குலுங்கச் செய்துவிட்டன.

அன்று மாலை பிராட்வே பாலிடெக்னிக் மைதானத்தில் ஜனநாயக சோஷலிஸ வாரத்தின் துவக்க விழா நடைபெற்றது.

### ஜூலை 16 – வியாழன்

சத்யமூர்த்தி பவனில் இன்று மாலை 7 மணிக்குக் கருத்தரங்கம் சிறப்பாக ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஜனநாயக சோஷலிஸம் என்ற கருத்தை உருக்கொடுத்து வெளியிட்ட தனிப் பெரும் சிறப்புடைய ஜெயப்பிரகாஷ் நாராயண் அவர்களே இந்த அரங்கைத் துவங்கி வைக்க ஏற்பாடு செய்திருந்தது பொருத்தமாக இருந்தது.

### கவியரங்கு

கருத்தரங்கு சத்யமூர்தத பவனில் நடைபெற்ற நேரத்திலேயே தேனும்பேட்டை காங்கிரஸ் மைதானத்தில் நாமக்கல் கவிஞர் தலைமையில் நடைபெற்ற கவியரங்கை லட்சம் மக்களுக்கு மேல் கூடியிருந்து ரசித்தனர். கவிஞர் கண்ணதாசன் கவியரங்கு அமைப்பாளராக இருந்து சிறப்பாக நடத்தி வைத்தார்.

### ஜூலை 17-வெள்ளி

ராஜதானிக் கல்லூரியில் மாணவர் விளையாட்டுப் போட்டியும் பரிசளிப்பு விழாவும் நடைபெற்றன. மைசூர் முதலமைச்சர் நிஜலிங்கப்பா இந்த விழாவிற் கலந்து கொண்டு சிறப்பித்தார்.

### ஜூலை 18 – சனிக்கிழமை

கருத்தரங்கின் இறுதி நாளான இன்று திட்டக் கமிஷன் துணைத் தலைவர் அசோக் மேத்தா கலந்து கொண்டு அரிய உரைகள் பகர்ந்தார். சமதர்ம தத்துவம் அறிந்த கலை வல்லார் பலர் கருத்தரங்கில் தமது ஆராய்ச்சி உரைகளை சமர்ப்பித்தனர்.

### ஜூலை 19– ஞாயிறு

விழாவின் உச்ச கட்டம் இன்றைய தினம் நடைபெற்ற ஊர்வலமும் பொதுக் கூட்டமும்தான். வெளியூர்களிலிருந்து வந்திருந்த 350 பஸ்கள், 700 லாரிகள் சென்னைத் தெருக்களில் பகல் மூன்று மணிக்குத் தொடங்கி இரவு 11 மணிக்கே கடற்கரையை வந்தடைந்தன வென்றால் மக்கள் கூட்டமும் ஊர்வலமும் எத்தகையனவென்று யூகித்துக் கொள்ளலாம். மாணவர், மாதர், தொண்டர், டிரக்குகள், அலங்கார வண்டிகளின் அணிவகுப்பை வர்ணிக்க முடியாது.



திருவல்லிக் கேணிக் கடற்கரையில் 15 லட்சம் பேர் அமைதியாகக் கூடியிருந்து தங்கள் ஒப்பற்ற தலைவரை நேரில் காணவும் அவரைப் பற்றிய புகழுரைகளைக் கேட்கவும் பகல் 2 மணி முதலே கூடத் தொடங்கி இரவு 10 மணிக்கு மேலும் காத்திருந்த காட்சி இதுவரை சென்னை நகரம் கண்டதில்லை. அவ்வளவு பெரிய கூட்டத்தில் பேசுவதற்குப் போடப் பட்டிருந்த மேடைக்கு யந்திர ஏணி (லிப்ட்) அமைத்திருந்தார்கள் என்றால் அந்தக் கூட்டம் எப்படியிருந்திருக்குமென்பதைக் கற்பனை செய்து கொள்ளலாம்.

### பொதுக்கூட்டம்

திரு. எஸ். கே. பட்டீலும் ஓ. வி. அளகேசனும் வி. கே. கிருஷ்ணமேனனும் பேசிய இந்தக் கூட்டத்திற்கு முதலமைச்சர் பக்தவத்சலம் தலைமை வகித்தார். ஆரம்பத்தில் ஏ. கே. ஸி. நடராஜன் கிளாரினட் இசை நடைபெற்றது. தலைமை வகித்த முதலமைச்சர் ஜனநாயகம் என்ற தத்துவத்திற்கே ஒரு நடமாடும் வடிவம்போன்று விளங்கும் காமராஜ் அவர்களைப் பற்றிப் பாராட்டிப் பேசியதுடன் அவரது தலைமையில் பல்லாண்டுகள் இந்த நாடு நலம் பெற்று வாழுமென்று கூறினார். தமது இடது கை எலும்பு முறிந்து ஆஸ்பத்திரி சிகிச்சையில் இருக்கும் முதலமைச்சர் இந்த விழா நாட்கள் அனைத்திலும் கையில் கட்டுடன் வந்து பேரார்வத்துடன் கலந்து கொண்டு சொற்பொழிவுகளும் செய்தார். எஸ். கே. பட்டீலின் பேச்சைக் கேட்ட அந்த மாபெரும் பொதுக்கூட்டம்—பொதுக் கூட்டம் என்பதை விட தமிழகம் என்றே சொல்லிவிடலாம். தமிழகம் முழுவதிலுமிருந்து அரசியல் விழிப்புப் பெற்றவர்கள் அனைவரும் வந்து கூடியிருந்த பேரவை அது—காமராஜ் எத்தகைய உன்னதமான அருமை மனிதர் என்பதை மிக நன்றாக உணர்ந்து பெருமையும் பூரிப்புமடைந்தனர். காமராஜ் வாழ்க என்று ஒவ்வொரு மூலையிலுமிருந்து கோஷங்கள் கிளம்பிய வண்ணமேயிருந்தன.

### படீலின் பேச்சு

நேருவுக்குப் பின் யார் என்று திகைப்புற்றிருந்த பாரத நாட்டுக்கு காலம் மிகச் சரியான விடை கொடுத்தது. அந்த விடைதான் காமராஜர். தமிழ் நாட்டின் தலைவராகவும், ஒரே ஒரு, லட்சிய, ராஜ்ய முதலமைச்சராகவும் மட்டுமே புகழ் பெற்றிருந்த காமராஜ் இப்பொழுது பாரதத்தின் விதியை நிர்ணயம் செய்யும் தலைவராக உயர்ந்து விட்டார்.

இப்படி ஒரு உயர்வை அடைவது சுலபமான காரியமல்ல. மனித முயற்சியினால் மட்டும் ஆவது அல்ல. கால சக்தியின் கண்மணியாகவே இன்று காமராஜ் விளங்குகிறார். யாரும் எதிர்பாராததொரு நேரத்தில், இந்தத் தலைமுறையில், பாரத நாடு இரண்டு முறை பயங்கரமான தேசீய நெருக்கடிகளுக்கு ஆளாகியிருக்கிறது. ஒன்று சுதந்திரம் பெற்றவுடனே சில மாதங்களிலேயே மகாத்மா காந்தியடிகள் நம்மைப் பிரிந்த நேரம். ஆனால் அன்றைய தினம் நமக்கெல்லாம், காந்தி

யடிகளை இழந்த சோகம் இருந்ததே தவிர நாட்டின் தலைவிதியைப் பற்றிய பயம் ஏற்படவில்லை. ஏனெனில் காந்தியடிகளின் திருவடிகளின் கீழ் அமர்ந்து தயாரான ஜவஹர்லால் நேரு, வல்லபாய்படேல் போன்ற சிங்கங்கள் நாட்டு மக்களை நடத்திச் செல்ல வல்லமை பெற்று விளங்கினுர்கள். பதினேழு ஆண்டுக்காலம் பாரதத்தைக் கட்டிக் காத்து அதன் பழைய வடிவையே மாற்றி இளமையும் வலிமையும் ததும்பச் செய்தளித்தார்கள்.

உண்மையில் நமது நாடு ஒரு நாடு என்ற உருப்பெற்றுப் புது வாழ்வு தொடங்கிப் பதினேழு பிராயம்தான் ஆகிறது. நல்ல பருவத்தில் நாட்டின் நாயகன் — நேரு பிரான் மறைந்ததும், இரண்டாவது தேசீய நெருக்கடி ஏற்பட்டு விட்டது. அந்த சமயத்தில் காமராஜ் காங்கிரஸ் தலைவராக மட்டும் இல்லாமலிருந்திருந்தால் இந்த நெருக்கடியைத் தீர்த்து வைக்கும் வாய்ப்பு என்ன ஆகியிருக்குமென்று சொல்ல முடியாது.

நேருவுக்குப் பின் ஒரு பிரதமரை நியமிப்பதில் அவ்வளவு நேர்மையாக, சரியாக ஒரு முடிவு கண்டு அதை மற்றவர் யாரும் ஒரு மனத்துடன் ஏற்கும்படிச் செய்யும் சக்தி அவர் ஒருவரிடம் தான் இருந்தது. ஏதோ சந்தர்ப்பவசத்தால் நிகழ்ந்த அந்த வாய்ப்பு காலசக்தியின் கட்டளையென்றே கருத வேண்டியதாகும். காமராஜரைத்தவிர வேறு யார் காங்கிரஸ் தலைவராக இருந்திருப்பினும் பிரச்னையை இவ்வளவு அமைதியாகத் தீர்த்திருக்க முடியுமா என்பது சந்தேகம்.

அப்படி அவர் என்ன செய்தார் என்று கேட்கத் தோன்றும். பாரதம் மேற்கொண்டுள்ள ஜனநாயகக் கொள்கையை திறம்பட அவர் கையாண்டது தான் நெருக்கடியேற்படாமல் நாட்டைக் காப்பாற்ற முடிந்ததற்குக் காரணம். அவர் இன்று தமிழர்களின் தலைவர் மட்டுமல்ல. பரந்த பாரதமே அவருடைய தலைமைக்கான நிலப்பரப்பு. உலகப் புகழ் அவரைத் தேடி வருகிறது. பெரும் பொறுப்பேற்று நடத்தவும் நாட்டுக்கு வழி காட்டவும் அவர் பல்லாண்டு வாழ்க.

### ஓ. வி. அளகேசன்

அமைச்சர் ஓ. வி. அளகேசன் பேசும் போது காமராஜரின் குணநலன்களை விரிவாகக் குறிப்பிட்டார். 'நேருவுக்குப் பின் காமராஜ் என்ற உண்மை நிலை நாட்டப்பட்டுவிட்டது. மக்களின் மனத்தை நன்குணர்ந்து அவர்களின் விருப்பம் தெரிந்து செயல் படுவதனுலும், பண்டித நேரு போன்ற தலைவர்களின் நம்பிக்கைக்குரிய தொண்டராகத் திகழ்ந்த காரணத்தினுலுமே காமராஜ் இன்று உன்னதமான பதவியை அடைந்திருக்கிறுர்.'

### அமைச்சர் ஆர். வி.

பரம்பரையான செல்வம், செல்வாக்கு, பதவி, இவை எதுவுமில்லாமல் சாதாரணச் சூழ்நிலையில் பிறந்து வளர்ந்தாலும் இனி இந்த நாட்டில் உண்மையான பொதுநலத் தொண்டர்கள் உயர்வடைய முடியுமென்ற மக்களின் நம்பிக்கைக்கு காமராஜ் ஒரு எடுத்துக்காட்டாகத் திகழ்கிறுர் என்றும் ஜனநாயகம் ஓங்க அவருடைய பணி மகத்தானதென்றும் அமைச்சர் ஆர். வெங்கட்ராமன் கூறினுர்.

### காமராஜ் வேண்டுகோள்

தமக்கு மக்கள் இப்படி எல்லையற்ற ஆர்வத்துடன் காட்டிய பரிவும் ஆசியும் தமக்குப் புதிய பலத்தையும் அத்துடன் புதிய பொறுப்புக்களையும் தந்திருக்கின்றன வென்று கூறி காங்கிரஸ் ஒன்றைத் தவிர வேறு ஸ்தாபனங்கள் இந்த நாட்டை முன்னேற்ற முடியாதென்பதை விளக்கினுர்.

எந்த சுதந்திரத்திற்காகக் காங்கிரஸ் தியாகங்கள் புரிந்து அரை நூற்றுண்டுக்கு மேல் போராடியதோ அந்த சுதந்திரம் வந்தது. அந்தப் புது வாழ்வில் மக்களுக்கு வறுமையும் பஞ்சமும் தீர்ந்து வளம் காணும் வரையில் காங்கிரஸ் தொடர்ந்து தொண்டு புரிந்தே வரும் என்கிறுர்.

சோஷலிஸத்தில் நம்பிக்கையுள்ளவர்கள் தனித்தனியாக நிற்காமல் காங்கிரசில் வந்து கலந்து உழைக்க வேண்டுமென்று கேட்டுகொண்டார்.

### கண்ணதாசன்

காங்கிரஸ் ஒன்று தவிர பிற கட்சிகளுக்கு இங்கு இடமில்லை யென்பதை உணர்ந்து தமிழ் தேசீயக் கட்சி தன்னையே கலைத்துக் கொண்டு காங்கிரசில் சேருகிறதென்றும் கூடி நிற்கும் மக்கள் தமிழகத்தின் பொது மக்கள் என்பதை எண்ணும் போது 1967 தேர்தலில் எதிர்த்து நிற்க யாருக்கும் துணிவிராது என்று தான் நம்புவதாகவும், அடிக்கடி இப்படித் தேசிய விழாக்கள் நடத்தி மக்களின் தேச பக்தி வெளிப்படச் செய்வதே இனி முக்கிய வேலையென்றும், தமிழகத்தைப் பற்றிய கவலையில்லாமல் பாரதம் முழுவதின் பொறுப்பிலும் தலைவர் ஈடுபடலாமென்பதற்கு இத்தகு பொதுக் கூட்டமே தக்க சான்று என்றும் கூறி நன்றி பகர்ந்தார். ✱

## விவசாயிகளுக்கு...

விவசாய உற்பத்தியை பெருக்க ரசாயன உரங்களின் உபயோகத்தைப் பற்றி விவசாயிகள் நன்றுக அறிவார்கள். உரங்களுக்கு இப்போது நல்ல கிராக்கி ஏற்பட்டுள்ளது. அமோனியம் சல்பேட்டு, யூரியா, கால்சியம் நைட்ரேட் இவைகளின் உபயோகத்தை விவசாயிகள் அறிந்துள்ளார்கள்.

ஆகவே அதற்கு மட்டுமே அதிகமாக தேவையிருக்கிறது. பாஸ்பாடிக் உரங்களின் உபயோகத்தை விவசாயிகளுக்கு வலியுறுத்த வேண்டியிருக்கிறது. விவசாயிகள் கடைசி உழவு காலத்தில் பாஸ்பாடிக் உரங்கள் இட்டால் உற்பத்தி பெருக்கத்துக்கு உதவும்.

அரசாங்கத்திலிருந்து உரங்கள் வாங்க கடன் சலுகை அளிக்கப்படுகிறது. இதன்படி விவசாயிகளுக்குப் பஞ்சாயத்து யூனியன் ஆணையர் கடன்கள் வழங்குகிறுர். விவசாயிகள் இப்போதே தேவையான உரங்களை வாங்கி வைத்துக் கொண்டால் அது நெருக்கடி நிலையை சமாளிக்க ஏதுவாகும் என்று திருச்சி மாவட்ட கலெக்டர் திரு. கே. சொக்கலிங்கம் அவர்கள் அறிவித்துள்ளார். ✱

# சந்திரனின் மேற் பரப்பு

சந்திரனுடைய மேல் பரப்பின் அமைப்பு பூமியின் மேல் பரப்பின் அமைப்பினின்றும் வேறுபடுகிறது. சந்திரனைச் சுற்றிலும், பூமியிலிருப்பது போல் வாயு மண்டலம் இல்லை. காற்றும், தண்ணீரும் இல்லை.

ஆகவே அதன் மேல் பரப்பு இந்த சக்திகளால் அரிக்கப்படுவதில்லை. படிவப் பாறைகளும் அங்கு கிடையாது. நம் பூமியைச் சுற்றியுள்ள வாயுமண்டலம் ஓர் கவசம் போல் பயன்படுகிறது. நமது பூமியைத் தாக்கும் விண்வீழ் கொள்ளிகளை அது தடுத்து அவற்றின் வேகத்தைக் குறைக்கிறது.

சுமார் $4\frac{1}{2}$ அடி கனமுள்ள ஓர் இரும்புச் சுவர் போல் நமது வாயுமண்டலம் நம்மைக் காத்து நிற்கிறது. ஒவ்வோர் நாளும் லக்ஷக்கணக்கான விண்வீழ் கொள்ளிகள் நம் உலகைத் தாக்குகின்றன.

இவற்றில் பெரும்பான்மையானவை வாயு மண்டலத்தை ஊடுருவும்போது அழிக்கப்படுகின்றன. சற்று பெரிய கொள்ளிகளின் வேகம் தடைப்படுத்தப்படுகிறது. மிகப் பெரிய விண்வீழ் கொள்ளிகளே நம் பூமியை வேகத்துடன் தாக்கி வெடித்து அதில் பள்ளங்களை உண்டாக்குகின்றன.

ஆனுல் சந்திரனில் இது போன்ற வாயு மண்டலம் இல்லாததால் மிகச் சிறிய தூசிகூட வெகுவேகத்துடன் பரப்பைத் தாக்கி நாசமாக்குகிறது. சந்திரனின் ஈர்ப்பு சக்தி மிகவும் குறைவாக இருப்பதால், அதில் தாக்கி வெடிக்கும் விண்வீழ் கொள்ளிகளின் துண்டுகள் பரவலாக வீசப்படுகின்றன. சில சமயங்கள் இந்தத் துண்டுகள் சந்திரனின் பரப்பிலிருந்து மிகுந்த வேகத்துடன் வெளியேறி விண்வெளிக்கே சென்று விடுகின்றன. சந்திரனைச் சுற்றிலும் வாயுமண்டலம் இல்லாத காரணத்தால், விண்வீழ் கொள்ளிகளைத் தவிர, சூரியனிலிருந்து வெளியாகும், காஸ்மிக் கிரணங்களும், மின்சக்தி ஊட்டப்பட்ட தூள்களும் சந்திரனை இடைவிடாது தாக்கிக்கொண்டே இருக்கின்றன.

இவ்விதம் விண்வீழ் கொள்ளிகள் இடைவிடாது சந்திரனைத் தாக்கித் தூளாவதால், பரப்பு, தூசியால் மூடப்பட்டிருக்கும் என்று ஓர் காலத்தில் கருதப்பட்டது. ஆனுல் சந்திரனிலிருந்து ஒளி பிரதிபலிக்கப்படும் விதத்தைக் கொண்டு பார்த்தால், அதன் பரப்பு வழவழப்பாக இல்லாமல், மேடுபள்ளம் நிறைந்ததாக இருக்க வேண்டுமென்று தோன்றுகிறது.

இவ்விதம் சந்திரனில் தூசி இல்லாமல் இருப்பதற்குக் காரணம் என்ன? நம் பூமியின் மேல்பரப்பில் உள்ள தூசி அணுக்களைச் சுற்றி காற்றுலான ஓர் உறை உள்ளது. ஆகவே அவை ஒன்றேடொன்று சேராமல் தனித்து உள்ளன. ஆனுல் சந்திரனின் பரப்பிலே காற்றே இல்லாத காரணத்தால் இந்த தூசிகள் ஒன்றேடொன்று சேர்ந்து கரடுமுரடான துவாரங்கள் பல உள்ள பாறை போன்ற பொருள் உண்டாகிறது. இந்தப் பொருள் சந்திரனின் மலைச் சரிவுகளின் மேலும், செங்குத்தான பாறைகளின் மேலும் படிந்துள்ளது. நமது பூமியிலே குளிர்ப்பிரதேசங்களை மூடியுள்ள பனிக்கட்டிகளைப் போல இவை சந்திரனின் மேற்பரப்பை மூடிக் கொண்டிருக்கின்றன. பனி, தோன்றுங்காலத்தில் இலேசாக இருந்து பிறகு கெட்டிப் படுவதைப் போல இப் பொருளும் தோன்றும் போது மிகவும் இலேசாக இருக்கின்றது. சூரியனிலிருந்து வெளியாகும் "புரோடான்" களும், "எலெக்ட்ரான்" களும் சந்திரனைத் தாக்கும்போது அதன் பரப்பிலுள்ள பொருள் ஆவியாகிறது. இது மீண்டும் குளிர்வடையும்போது, தூசிப் பாறை கெட்டிப்படுத்தப் படுகிறது.

சந்திரனிலுள்ள நிலைமையைக் கண்டுபிடிக்கும் முயற்சியில், விஞ்ஞானிகள், அனேக பந்துகளை "புரோடான்" களால் தாக்கிச் சோதனை செய்தனர்.

அப்போது அந்தப் பந்துகளும் சந்திரனின் பரப்பைப் போலவே விரிவடைந்து பின்னர் சேர்ந்தன. சந்திரனின் பரப்பை ஒரே சமயத்தில், புரோடான்களும், விண்வீழ் கொள்ளிகளும் சேர்ந்து தாக்குவதால் அதன் அமைப்பு பல தரப்பட்டதாக இருக்க வேண்டும். மேலும் சந்திரனின் பரப்பிலே தோன்றும் கருமையான பிரதேசங்கள் — இவற்றைக் கடல்கள் என்று சொல்கிறுர்கள் — எரிமலைக் குழம்பு உறைந்ததால் ஏற்பட்டவை. சந்திரனிலுள்ள எரிமலைகள் வெடிக்கும் போது வெளியேற்றப்பட்ட பாறைகள், பெருங்கற்கள் இவற்றுல் ஆனது இந்தப் பகுதி. இவற்றின் கனம் பல கிலோமீட்டர்கள் அளவுள்ளதாக இருக்கலாம் என்றும் கருதப்படுகிறது.

✱

---

**கடலூர் டி. மு. கோ.**
**O. P. 40/64**

In the matter of the estate of deceased chockalinga Kounder.

அப்பாவு கவுண்டர்-1, சதாசிவ கவுண்டர்-2, ஷண்முக கவுண்டர்-3, ஏழுமலை கவுண்டர்-4, அன்னபூரணி-5, நவநீதம் -6, சின்ன பொன்னம்மாள்-7 —மனுதாரர்கள்

மனுதாரர்கள் ஷெ நெம்பரில் இறந்த சொக்கலிங்க கவுண்டருக்கு வார்சுகளென்றும் ஷெ யார்களுக்கு வார்சு சர்டிபிகேட் கோரி கொடுத்த மனு 31-7-64-ல் ஈரங்கி. ஆட்சேபணையிருந்தால் ஷெ கோர்ட்டில் அன்று காலை 10 மணிக்கு ஆஜராகித் தெரிவிக்கலாம்.

R. சேஷாத்ரி,
2/6157/88 அட்வகேட்.


நாட்டின் பாதுகாப்புக்கு
ஆபத்து ஏற்பட்டுள்ளது,
முழு வலிமையுடன் அதைக் காருங்கள்.
—ஜவாஹர்லால் நேரு







அவசியமானபோது மட்டுமே வாங்குங்கள்

அவசியம் இல்லை என்று கருதும்போது பொருள்களை வாங்காதீர்கள் இப்படி சேமிப்பதை அரசாங்க பாதுகாப்பு செக்யூரிட்டிகளில் முதலீடு செய்யுங்கள். இதனுல் விலைவாசிகள் உயருவதை கட்டுப்படுத்துவதுடன், பாதுகாப்புத் தேவைக்கு அதிக வளங்கள் கிடைக்கும்படியும் செய்கிறீர்கள்.

உங்கள் சேமிப்பு பாதுகாப்பு தேவைக்கு பயன்படுகிறது

# இயற்கையைப் போற்றுவோம்

இயற்கையை நேசியாத மனிதன் இல்லை. இயற்கையை ரசிக்கத் தெரியாத மனிதன் பூரண மனிதனாக மாட்டான் என்று பேரறிஞர்கள் பலர் கூறியிருக்கிறார்கள். தேசத் தலைவர்கள், வீரர்கள், கவிஞர்கள், உலக வழிகாட்டிகள் என்று இன்று நம்மால் மதிக்கப்படுகின்ற எல்லோருமே இயற்கையை மிகவும் நேசிப்பவர்களாக இருந்திருக்கிறார்கள். நம்முடைய முன்னோர்கள் ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக இயற்கையோடு கலந்த வாழ்க்கையையே விரும்பி இயற்கைச் சூழலோடு கூடிய இடங்களைத் தேடிச் சென்று குடியேறி வாழ்ந்திருக்கிறார்கள். நமது நூற்றாண்டில் இந்திய மக்களில் பலர் பிழைப்புக் காரணமாகத் தொழிற்சாலைகள் நிறைந்த நகரங்களில் குடியேறி வாழத் தொடங்கியதால் நாளுக்கு நாள் வயலும் வயல் சூழ்ந்த வெளிகளும், நதியும் நதிதீரமும், சோலையும் மலையும் கடலும் என்று இவையனைத்தும் தரும் இன்பத்தை மறந்து வருகிறார்கள்.

ஏராளமான நகரவாசிகளுக்கு இயற்கையும் இயற்கைச் சூழ்நிலைகளும் என்ன என்பதே தெரியாமல் போய்க்கொண்டிருக்கிறது.

தார்போட்ட சாலைகளிலும் சந்தடி மிக்க சூழ்நிலையிலும் உருளுகின்ற வாழ்க்கை முறையைப் பழகிக் கொண்ட அவர்களுக்கு இயற்கை, தாவரங்கள், உயிரினங்கள் ஆகியவற்றில் அதிகப்பற்று ஏற்படுவதற்கு வாய்ப்புக்களே இல்லாமல் இருக்கிறது.

இப்படி இயற்கைக்கு மாறுபட்ட சூழ்நிலைகளில் மனித இனம் தொடர்ந்து வசித்து வருமானால் வருங்கால சந்ததியானது மனதில் உரமற்று, வடிவில் பொலிவிழந்து, குறுகி நசித்துப் போவது உறுதி அந்த நிலை ஏற்படாமலிருக்க மனிதன் இயற்கையோடு இணைந்து வாழும் வாழ்க்கையை மீண்டும் ஏற்படுத்திக் கொள்வதற்கு முயற்சி செய்ய வேண்டும். உள்ளத்தாலும், உணர்வாலும், உடலாலும் மனிதன் உண்மையான மனிதனாக வாழ்வதற்கு இயற்கைப் பாதுகாப்பில் தீவிரமான கருத்துச் செலுத்த வேண்டும்.

### இயற்கைப் பாதுகாப்பு என்பது என்ன ?

மண்ணும், மலையும், அருவியும், ஆறும், சிற்றுயிர்களும், தாவரங்களும் நிறைந்து விளங்குகின்றது இந்த உலகம். மனித வாழ்வுக்கு இப்படிப்பட்ட இயற்கைச் செல்வங்கள் அனைத்தும் இன்றியமையாத தேவைகளாகும். தாவரங்களையும் விலங்கினங்களையும் பாதுகாத்துப் பேணுவதும், மலையையும், மடுவையும், ஆற்றையும், கடலையும் பயன்படும் முறையில் நேசித்துப் போற்றி வாழ்வதும் இயற்கைப் பாதுகாப்பு எனப்படும்.

### இயற்கையைப் பாதுகாப்பது எப்படி ?

இதற்கு இயற்கையை அனுபவிக்கும் ஆற்றலையும் முதலில் மனிதனிடம் வளரச் செய்ய வேண்டும். சிறு வயதிலிருந்தே ஒவ்வொருவரும் இயற்கை அழகு நிறைந்த சமவெளிகளையும், பசுமை நிறைந்த புல் தரையையும், வெண்பனி மூடிய மலை முகட்டையும், சலசலப்பு மிகுந்த மலை அருவிகளையும், கடற்கரை மணற்குன்றுகளையும் பார்த்து அவை தரும் பேரின்பத்தைப் புரிந்து கொள்ளும் நிலைமையைத் தோற்றுவித்தால் மனிதனிடம் இயற்கையை நேசிக்கும் பண்பு சுலபமாக உண்டாகிவிடும்.

ஆகவே இயற்கை அழகுள்ள இடங்களைக் காக்கவும் அவற்றிற்குக் கேடு உண்டாகாதபடி மனிதன் போய் வரவும் வழிகளை உண்டாக்க வேண்டும். தாவரங்களும் உயிர்ப் பிராணிகளும் நிறைந்த காடுகள் நாடெங்கும் இருக்கின்றன. அக்காடுகளில் குறிப்பிட்ட சிலவற்றையாவது மனிதன் கண்ட கண்டபடி அழிக்காமல் காக்க வேண்டும். அதே போல உயிர்ப் பிராணிகள் அழிக்கப்படாமல் பேணிக் காக்கப்படுவதற்கான சில இடங்களும் நாட்டில் தோற்றுவிக்கப்படவேண்டும்.

### தேசீய வனங்களும் உயிரினப் பாதுகாப்புக் காடுகளும்

மரஞ்செடி கொடிகளை மக்கள் அழிக்காதபடி சட்டமியற்றிக் காக்கப்படும் காடுகள் தேசீய வனங்கள் எனப்படும். விலங்குகள், பறவைகள் முதலியனவற்றை மனிதன் அழிக்காமல் அவைகள் சுதந்திரமாக வாழ்வதற்கென்று ஒதுக்கப் பெற்ற இடங்கள் உயிரினப் பாதுகாப்புக் காடுகள் எனப்படும். ஒரு காலத்தில் உலகில் பல நாடுகளில் மக்கள் கட்டுப்பாடில்லாமல் தாவரங்களையும் விலங்கினங்களையும் பெரிய அளவில் அழித்து வந்தார்கள்.

அதனால் உயிரினங்களின் எண்ணிக்கை குறைந்து கொண்டே வந்தது. ஒரு சில உயிரினங்கள் வம்சமே இல்லாமல் மாய்ந்து அற்றுப் போய் விட்டன.

இந்த நிலைமை வளர்ந்தால் நாடே உயிர் வளமற்றுப் போகுமென்று மனிதன் உணர்ந்த போதுதான் தேசிய வனங்களையும் உயிரினப் பாதுகாப்புக் காடுகளையும் தோற்றுவிக்கும் முயற்சி உலகில் எழுந்தது.

### இந்தியாவில் பாதுகாப்புக் காடுகள்

இந்தியாவில் பாதுகாப்புக் காடுகளை அமைக்கும் முயற்சி முதன் முதல் 1934-ஆம் ஆண்டில்தான் தொடங்கப்பட்டது. உத்திரப் பிரதேசத்தில் அப்போது கவர்னராயிருந்த சர் மால்காம் ஹெய்லி பாதுகாப்புக் காடுகள் பற்றிய சட்டம் ஒன்றை இயற்றச் செய்து பெரியதொரு தேசிய வனம் அமைக்கும் முயற்சியையும் மேற்கொண்டார். அப்போது இயற்றப் பெற்ற சட்டப்படி பாதுகாப்புக் காடுகளில் எந்தப் பிராணியையும் கொல்வதோ, காயப்படுத்துவதோ, தொந்தரவுக்குட்படுத்துவதோ தண்டனைக்குரிய குற்றமாகக் கருதப் படும்.

பாதுகாப்புக் காடாக அறிவிக்கப் பெற்ற பகுதிகளில் மக்கள் நுழையவோ வசிக்கவோ விரும்பினால் அதற்குச் சில சிறப்பு விதிகளையும் நடைமுறைகளையும் கடைப்பிடிக்க வேண்டும். இன்னும் அக்காடுகளிலிருந்து பறவைகளின் முட்டைகளையோ, விலங்குகளின் குட்டிகளையோ அழிப்பதும் எடுத்துச் செல்வதும் குற்றமாகும். அதே போல தாவரங்களையும் வெட்டுவதோ, அழிப்பதோ, அகற்றுவதோ கூடாது.

இப்படி இந்தியாவில் உத்திரப் பிரதேசத்தில் முதன் முதல் இயற்றப்பட்ட சட்டத்தைப் பின்பற்றி இதர மாநிலங்களும் உயிரினப் பாதுகாப்புக்கான சட்டங்களைச் செய்து தேசிய வனங்களையும் உயிரினப் பாதுகாப்புக் காடுகளையும் தோற்றுவித்தன. இப்போது மைசூர், கேரளம், தமிழ்நாடு முதலிய எல்லா மாநிலங்களிலும் பெரும் பெரும் தேசிய வனங்களும் உயிர்ப் பாதுகாப்புக் காடுகளும் இருக்கின்றன. தமிழ் நாட்டில் மதுரை மாவட்டத்திலுள்ள பெரியாறு உயிரினப் பாதுகாப்புக் காடு இயற்கை அழகு நிறைந்த ஓர் இடமாகும். இந்தக் காட்டில் யானை, காட்டெருமை, கரடி, மான், காட்டு மாடு, காட்டாடு, வேங்கைப் புலி, சிறுத்தைப் புலி முதலான மிருகங்கள் கூட்டங் கூட்டமாக உலவித் திரிகின்றன. ஏராளமான பறவை வகைகளும் அங்கு உள்ளன. ஆண்டு தோறும் ஆயிரக் கணக்கான யாத்திரிகர்கள் அங்கு சென்று சுதந்திரமாகச் சுற்றித் திரியும் உயிரினங்களைக் கண்டு மகிழ்ந்து செல்கிறார்கள். நீலகிரி மாவட்டத்திலுள்ள முதுமலை பாதுகாப்புக் காடும் தமிழ் நாட்டில் பிரசித்தி பெற்றதாகும்.

பழங்காலத்தில் இந்திய மக்கள் மரங்கள் தெய்வத் தன்மை உடையன என்றும் விலங்குகளைக் கொல்வது பாவம் என்றும் வைராக்கியமாகக் கருதி வந்ததால் மரங்களுக்கும் விலங்குகளுக்கும் இயற்கையாகவே சில பாதுகாப்புகள் கிடைத்து வந்தன. சமஸ்தான மன்னர்களும் ஜமீன்தார்களும் தலைதூக்கியிருந்த இடைக் காலத்திலும் அவர்கள் தத்தம் நிர்வாக எல்லைக்குட்பட்ட பகுதிகளிலுள்ள காடுகளையும் காட்டு விலங்குகளையும் பேணிக் காத்து வந்தார்கள். அப்படிப்பட்ட பாதுகாப்புக்களெல்லாம் இப்போது குறைந்திருக்கின்ற காரணத்தால்தான் ஒவ்வொருவரும் இயற்கையை நேசிக்கப் பழகி இயற்கைப் பாதுகாப்பில் மனம் செலுத்த வேண்டியது இன்றியமையாததாயிருக்கிறது.

★

---

காமராஜ்

## இந்த நூற்றாண்டின் சிற்பி

— அசோக் மேத்தா

✽

இந்தியாவின் ஒருமைப்பாட்டையும் ஐக்கியத்தையும் பேணிக் காப்பதிலும் 10 ஆண்டு காலத்தில் சமூக புரட்சியொன்றை ஏற்படச் செய்வதிலும் காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ காமராஜை ஆதரித்து ஒத்துழைக்குமாறு பொதுமக்களை திட்டக் கமிஷன் உபதலைவர் ஸ்ரீ அசோக்மேத்தா கேட்டுக் கொண்டார்.

ஸ்ரீ காமராஜின் 62 வது பிறந்த தினத்தையொட்டி ஏற்பாடுகள் செய்யப்பட்ட 'ஜனநாயக சோஷலிஸம்' பற்றிய கருத்தரங்கில் ஸ்ரீ அசோக் மேத்தா இறுதி உரை நிகழ்த்தினார்.

நமது சமூக புரட்சியின் வரலாற்றில் அடுத்த 10 ஆண்டுகள் நெருக்கடியான காலமாக இருக்கும். ஏற்படுத்தப்பட விருக்கும் மாறுதல், 1947க்கு முன் நடந்த விடுதலை போராட்டத்தைக் காட்டிலும் கடினமானது என்று ஸ்ரீ அசோக் மேத்தா தொடர்ந்து குறிப்பிட்டார்.

21 வது நூற்றாண்டின் சிற்பி ஸ்ரீ காமராஜ் என்றார். 21 வது நூற்றாண்டுக்காக சிந்தித்து பாடுபடுமாறு ஸ்ரீ காமராஜ் தற்போது கேட்டுக்கொள்ளப்பட்டிருக்கிறார். தாம் மேற்கொண்ட பொறுப்புகளை ஸ்ரீ காமராஜ் நிறைவேற்ற வேண்டுமானால், நவபாரதத்தின் சிற்பியாக அவர் இருக்கவேண்டுமானால், 21ம் நூற்றாண்டின் தேவைகளையும், அபிலாஷைகளையும், சாத்ய கூறுகளையும் பற்றி ஸ்ரீ காமராஜ் சிந்திக்க வேண்டும். அதற்கான அஸ்திவாரத்தை இப்போதே அமைக்க வேண்டும் என்று திட்டக் கமிஷன் உபதலைவர் தொடர்ந்து கூறினார்.

கம்யூனிஸ்ட் நாடுகளில் அல்லது சர்வாதிகார நாடுகளில் அல்லது ஓரளவு வரம்புக்குட்பட்ட ஜனநாயக நாட்டில் சமூக புரட்சியை ஏற்படுத்துவது எளிது. ஆனால் இந்தியா புரட்சியை மக்களின் சம்மதத்துடனும், ஒத்துழைப்புடனும் ஏற்படுத்த விரும்புகிறது. இந்தியாவில் இம் மாற்றத்தை மக்களே செய்வர். நமக்கு அந்த நம்பிக்கை இருக்கிறது. அதனால் தான் ஜனநாயக சோஷலிஸத்தைப் பற்றி பேசுகிறோம்.

தேக்க நிலையிலிருந்து, புரட்சிகரமான மாறுதலை நோக்கி செல்ல மக்கள் விரும்புகின்றனர் என்பதை ஸ்ரீ காமராஜ் அறிவார்.

நாங்கள் ஏன் காங்கிரஸுக்கு திரும்ப வந்தோம்? ஏனெனில் பொறுப்பு மிகப் பெரியது என்பதை நாங்கள் உணர்ந்து விட்டோம். பொறுப்பில் பங்கு கொள்ளுமாறு ஸ்ரீ. காமராஜ் கூறியதும், அவருடன் ஒத்துழைக்க நாங்கள் விரும்பினோம் என்று ஸ்ரீ. அசோக் மேத்தா தொடர்ந்து கூறினார்.

மக்களின் சக்தியில் நம்பிக்கைக் கொண்ட ஸ்ரீ காமராஜ், நெருக்கடியான வருடங்களில் வழி காட்டுவார் எனவும், ஜனநாயக அமைப்பிலும் சமூகப் புரட்சியை ஏற்படுத்த முடியும் என்பதை மீண்டும் அவர் உலகுக்குக் காட்டுவார் என்றும் ஸ்ரீ. அசோக் மேத்தா நம்பிக்கை தெரிவித்தார்.

★




ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே

ஒலி 28 | 26—7—1964 | வாரம் 37

# விவசாய வளர்ச்சி

★

உணவு உற்பத்தியை அதிகரிப்பதற்கு உதவி புரிவதாக எண்ணிக்கொண்டு, பலவகையில் கடன்களும், ஒரு சில இலவச நிதியுதவிகளும் வழங்கி பொதுப் பணத்தை வாரியிறைப்பதில் துளியும் பயனில்லை என்று திட்டக் கமிஷன் துணைத் தலைவரான அசோக் மேத்தா எச்சரித்திருக்கிறார்.

அரசாங்க அறிக்கைகளிலும் புள்ளிவிபரங்களிலும் பிரசாரங்களிலும் விவசாயிகளுக்கு அரசாங்கம் பேருதவி புரிந்து வருவதைப் பார்த்து உண்மையிலே பிரமிக்க வேண்டியிருக்கிறது. பெரும் பணச் செலவு ஆகிறதென்னமோ உண்மைதான். அதற்கு உரிய பலன் விளையவில்லை என்பது தான் அசோக் மேத்தா எடுத்துக் காட்டியிருப்பதன் பொருள்.

கடனாகக் கொடுக்கப்படும் நிதிகள் விவசாயிகளுக்குச் சரியாகவும், உரிய காலத்திலும், முழுமையாகவும் போய்க் கிடைத்து அவர்கள் அதைச் சரியாகப் பயன்படுத்துகிறார்களா என்பது ஒன்று. கருவிகளை அவர்களுக்கு வழங்கும் உதவிகளில், தேவையான நல்ல கருவிகள் வாங்கப்பட்டு அவை வேண்டியவர்களுக்குக் கிடைக்குமாறு செய்யப்படுகிறதா என்பது மற்றொன்று. இப்படிப் பல பிரச்னைகள் இதில் இருக்கின்றன. படிக்கத் தெரியாத விவசாயிகளிடம் வெற்றுத்தாளில் கையெழுத்துக்களை வாங்கிக் கொண்டு அதிக தொகைக்கு பில்கள் தயாரித்து பம்பு செட்டுகளைச் சில வியாபாரிகள், விவசாயிகள் தலையில் கட்டுகிறார்கள் என்ற புகார்களும் நாம் கேள்விப் படுகிறோம். நேரிடையாக இந்தக் கருவிகளை யூனியன் ஆணையர்கள் டெண்டர் வரவழைத்து வாங்கி நேரிடையாகவே விவசாயிகளுக்கு வழங்கலாம்.

இடையில் வியாபாரிகள் விவசாயிகளுக்கு சப்ளை செய்து விட்டு, பின்னர் பில்கள் தயாரித்துப் பணம் வாங்குவதென்ற ஏற்பாடு சில இடங்களில் இருப்பதாகவும், அதிகப்படியாகக் கிடைக்கும் பணத்தில் பல பேருக்குப் பங்கு இருப்பதாகவும் நம்மிடம் நேரில் முறையிட்ட விவசாயிகள் உண்டு.

இந்தப் புகார்களின் அடிப்படையும், உண்மையும் விசாரித்துப் பரிசீலிக்கத் தக்கவையாகும். உதவிகள் வழங்கும் ஏற்பாடுகளில் குறைகள் இருக்கின்றன என்ற அளவுக்கு இவற்றைப் படிப்பினையாகக் கொள்ளலாம்.

விதைப் பண்ணைகள் வைப்பதற்காகத் தனியார் நிலங்களை-தரிசு நிலங்களைப் பெரும் தொகைக்குக் குத்தகைக்கு எடுத்து அவை யாதொரு பலனும் தராமல் போன சம்பவங்கள் உண்டு. இவையெல்லாம் நிர்வாக ஊழல்களினால் விளைபவை. உரம் வழங்குவதிலும் விவசாயிகள் கண்ணீர் சிந்தும் படியான காரியங்கள் எவ்வளவோ உண்டு.

எவ்வளவோ ஆர்வத்துடனும் நல்லெண்ணத்துடனும் அரசாங்கம் செயல்படும் அபிவிருத்தித் திட்டங்கள் போதுமான நிர்வாகத் திறமின்மையாலும், செயல்படுகிறவர்களின் தேசபக்தியின்மையாலும் பாழ்பட்டுப்போகின்றன.

சென்னை சட்ட மன்றத்தில் தாக்கலாகியுள்ள கணக்குப்பரிசோதனை அறிக்கையில் இத்தகைய தண்டச் செலவுகள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. தக்க ஆதாரங்களுடன் விரிவாகவும் இவை எடுத்துக் காட்டப்படுகின்றன.

நல்ல காரியங்களில் புல்லுருவிகள் தலையிடாமல் கண்காணிப்பாகவும் இருந்தால் நாம் செலவிடும் கோடிக் கணக்கான ரூபாய்களும் நல்ல பயன் கொடுக்கும்.

★

# கண்ணோட்டம்

— ரா. நா.

காங்கிரஸ் தலைவர் காமராஜரின் 62வது பிறந்ததின விழா சென்னையில் மிகக் கோலாகலமாகக் கொண்டாடப்பட்டது. 62 அலங்கார வாசல்கள் கலையழகுடன் நகரில் பல பாகங்களில் அமைக்கப்பட்டதனால் விழா கோலாகலமாகக் கொண்டாடப் பட்டது என்று நான் கூறவில்லை. இவ்விழாவை ஒட்டி நடந்த கருத்தரங்கும், கவியரங்கும், கடைசி நாள் கடற்கரையில் நடந்த பிரமாண்டமான பொதுக் கூட்டமும் தான் விழாவை நாட்டிற்கு நற்பயன் அளிக்க வல்லதாகச் செய்தன.

இவ்விழா காமராஜருக்கு பாராட்டுரை வழங்க மட்டும் நடத்தப்பட வில்லை. இவ்விழாவின் மூலம் காமராஜரின் ஜீவிய லட்சியமாகிய ஜனநாயக சோஷலிஸத்தை மக்கள் எப்படி அடைவது என்பதை அவர்கள் நன்கு அறிந்து பணி ஆற்றுவதற்காகவே கொண்டாடப்பட்டது.

அரசினர் துறைத் தொழில்கள் எப்படி நிர்வகிக்கப்பட வேண்டும், அதில் கிடைக்கும் லாபத்தில் தொழிலாளருக்குப் பங்கு வேண்டும், குடியானவர்களுக்கு பாதுகாப்பு வேண்டும், கிராமப்புறம் தொழில் மயமாக்கப்பட வேண்டும், ஆரவாரக் கல்வியல்ல பண்பாட்டுக் கல்வியே வேண்டும், நிர்வாகம் எப்படி அமைய இதுபோன்ற பல பயனுள்ள கருத்துக்களைத் தொகுத்து முதலமைச்சரிடம் கொடுக்கப் பட்டது.

கவிரயங்கில் காமராஜரைப் புகழ்வதுடன் நம் கவிஞர்கள் நிற்கவில்லை. நம் நாட்டு சுதந்திரப்போராட்ட வரலாற்றையும், அதில் பங்கு கொண்ட வீரர்கள் வரலாற்றையும் நம் கவிஞர்கள் கேட்போர் நெஞ்சை அள்ளும் முறையில் படம் பிடித்துக் காட்டினார்கள்.

லட்சோப லட்சம் மக்கள் ஊர்வலமாகச் சென்று கடற்கரையில் அமர்ந்து அகில இந்தியப் புகழ் பெற்ற தலைவர் காமராஜரின் சீரிய தேச சேவையையும், சாமர்த்தியத்தையும் புகழ்ந்து பேசியதைக் கேட்டனர்.

இந்தப் பாராட்டுரைகளைக் கேட்ட காமராஜர் என்ன சொன்னார் தெரியுமா? "உங்கள் புகழுரைகள் என் பொறுப்பை அதிகமாக்கிவிட்டது. எப்படியாவது மக்கள் சுகவாழ்வு வாழ்வதற்கு வகை செய்தே ஆகவேண்டும் என்பதை நான் உணர்கிறேன்' என்று கூறினார்.

நாட்டு மக்கள் கஷ்டப்படுகையில் பிறந்ததின விழாவுக்காக இப்படி பணம் செலவழிக்கலாமா என்று பொருமைக்காரர்கள் கொக்கரிக்கிறார்கள். ஆனால் இந்த விழாவின் பயனாக நம் ராஜ்ய மக்கள் ஜனநாயக சோஷலிஸம் கிட்டும்படி செய்வதில் தங்கள் பங்கு என்ன என்பதை உணர்ந்து விட்டார்கள். அவர்களிடையே தேசாபிமான வேகம் தோன்றிவிட்டது. இந்த மாறுதல் மக்களிடம் ஏற்படுவதற்கு எவ்வளவு செலவு செய்தால் தான் என்ன? மக்கள் மனதை ஈர்ப்பதற்கு ஓரளவு ஆடம்பர பிரசாரம் வேண்டித்தான் இருக்கிறது. இதில் சந்தேகம் உள்ளவர்கள் அமெரிக்க ஜனாதிபதி தேர்தலுக்கு முன்னோடியாக எவ்வளவு கோடி டாலர்கள் செலவாகின்றது என்பதை கவனிக்க வேண்டும்.

நமது பிரதமர் ஒரு நற்காரியம் செய்துள்ளார். தமது வேலை பளுவைக் குறைத்துக்கொள்வதற்காக வெளிநாட்டிலாகா பொறுப்பை சர்தார் ஸ்வரண் சிங்கிடம் ஒப்படைத்திருக்கிறார். இதை முன்னமே செய்திருந்தால் அவர் உடல் நிலை பாதிக்கப்பட்டிராது. சர்தார் ஸ்வரண் சிங் திறமை வாய்ந்த அமைச்சர். ஆகையால் தம் புதுப் பொறுப்பை அவர் சிறப்பாக நிறைவேற்றுவார். நமது உணவு மந்திரி திரு. ஸி. எஸ். அவர்களுக்கு சமுதாய அபிவிருத்தி, கூட்டுறவு இலாகா பொறுப்புகள் கூடுதலாக அளிக்கப்பட்டுள்ளன.

உணவு நிலையை சீர்படுத்த இந்த இலாக்காக்கள் அவசியமானவை. யாவற்றையும் சேர்த்து திறம்பட நிர்வகிப்பதன் மூலம் அவர் நாட்டிலிருந்து உணவு நெருக்கடியைப் போக்குவார் என எதிர்பார்க்கலாம்.

நிற்க நமது பிரதமரின் உடல் நிலை பற்றி எதுவும் தகவல் வராததனால் அயல் நாட்டுப் பத்திரிகைகள் கவலையளிக்கும் செய்திகளைப் பரப்பி வருகின்றன. பிரதமர் காரியாலயத்திலிருந்து எவ்வித அறிக்கைகளும் வெளி வருவதில்லை. லண்டனில் நடந்து முடிந்த காமன் வெல்த் பிரதமர்கள் மகாநாடு நடவடிக்கைகள் பற்றி பிரதமரின் கருத்தை அறிய முடியவில்லை. அவர் சீக்கிரம் குணமடைந்து நாட்டின் வைபவங்களில் கலந்து கொண்டு மக்களுக்கு உற்சாகமளிப்பார் என நம்புகிறோம்.

காமன்வெல்த் பிரதமர்கள் மகாநாட்டு நடவடிக்கைகள் பற்றி வெளிவந்துள்ள அறிக்கையில் இந்தியா பாகிஸ்தான் பிரச்னைகள் பற்றி குறிப்பிட்டிருப்பதிலிருந்து நமது பிரதிநிதி டி. டி. கே. மீது நம் அரசியல் தலைவர்கள் சிலர் ஆத்திரமான அறிக்கைகள் வெளியிட்டிருக்கின்றனர். காமன்வெல்த் உறுப்பினர்களுள் ஏற்பட்டுள்ள தகராறுகள் பற்றி பிரதமர்கள் மகாநாட்டில் விவாதிக்கலாகாது என்பது சம்பிரதாயம். இவ் ஆண்டு மகாநாட்டில் இந்தோ பாகிஸ்தான் விவகாரங்கள் பற்றி நிகழ்ச்சி நிரலில் குறிப்பிடப் படவில்லை. அது பற்றி விவாதம் நடக்கவுமில்லை.

அப்படியிருக்க இந்தோ பாகிஸ்தான் பிரச்னைகள் பற்றி அறிக்கையில் குறிப்பிட வேண்டிய அவசியமென்ன? இப்படி இடம் பெறுவதை நம் பிரதிநிதி எப்படி ஆட்சேபிக்காமல் இருந்தார் என்று கேட்கிறார்கள். காஷ்மீர் பற்றி அறிக்கையில் பிரஸ்தாபமே கிடையாது, இந்தோ பாகிஸ்தான் பிரச்னைகள் பற்றி இருநாட்டுத் தலைவர்களும் வெளியிட்டுள்ள அறிக்கைகள் மகிழ்ச்சிக்குரியன, பிரச்னைகள் சுமுகமாகத் தீர்க்கப்படும் என எதிர்பார்ப்பதாகத்தானே கூறப்பட்டுள்ளது என்று பதிலளிக்கப்படுகிறது.

எனினும் அறிக்கை தயார் செய்யுமுன் அது நம் பிரதிநிதியிடம் காட்டப்பட்டிருக்க வேண்டும். அப்படிக் காட்டப்பட்டிருந்தால் அவர் ஆட்சேபித்தாரா என்பதுதான் கவனிக்க வேண்டிய விஷயம். ஆனால் இவ்விஷயத்தைப் பிரமாதப்படுத்துவதால் பாகிஸ்தான் பிரதிநிதிகள் தாங்கள் ஏதோ வெற்றி பெற்று விட்டதாக மகிழ்வதற்கு இடமளிக்கிறது. ●

## காமராஜ் நாட்டுப் பணியில் நாட்டமுடையவர்

— முதலமைச்சர்

காமராஜ் இளமை முதலே நாட்டுப்பணியில் தம்மை அர்பணித்துக் கொண்டார். சாதாரண நிலையிலிருந்து மிக உயர்ந்த நிலை எய்தியுள்ளார். வேறு எந்த நலனையும் கருதாமல் நாட்டு நலனையே ஒரே நோக்குடன் கருதி சென்ற 45 ஆண்டுகளாக அவர் ஆற்றியுள்ள அரும்பணிக்காக, அவரை இன்று இந்திய மக்கள்பாராட்டுகிறார்கள். தொண்டனாகத் தொடங்கி நாட்டுக்கு நல்வழி காட்டும் தலைவனாக உயர்ந்து உலகம் எதிர் நோக்கும் நம் நாட்டுப் பிரச்னைகளை தீர்த்து வைப்பதில் நிகரற்று விளங்குகிறார். ஜனநாயக சோஷலிஸத் தத்துவத்தை உள்ளபடி உணர்ந்து அதிலேயே ஊறியவர் அவர். அவருக்குஅளித்து வரும் ஆதரவு, ஜனநாயக சோஷலிஸம் அமைக்க உறுதுணையாகும்.

ஜனநாயகத்தில் எதிர்க்கட்சி அவசியம். தமிழ் நாட்டில் காங்கிரஸை ஒழிப்பதற்காக கட்சிகள் உதிரியாக உள்ளனவே தவிர உருப்படியாக ஒன்றும் இயங்கவில்லை.

**'ஹிந்தி திணிப்பு' இராது**

ஹிந்தியைப் பூதமாகக் காட்டி பயமுறுத்துகிறார்கள். நாம் ஹிந்தியைத் திணிக்க வில்லை. மத்திய அரசாங்க உத்தியோக விருப்ப முள்ளவர்களுக்கு ஹிந்தி தேவையானபடியால் அதைப் படித்து முன்னேற வேண்டும் என்கிறோம். நாட்டுக்குப் பொது மொழி அது. ஹிந்தியை காட்டி காங்கிரஸை எதிர்க்க முயல்கிறார்கள். காமராஜ் உள்ள வரை எந்தத் திணிப்பும் எந்த அநீதியும் நிகழ இடமில்லை. இதை மக்கள் அறிவர் என்றார்.

அமெரிக்காவில்

# ஜனாதிபதி தேர்தல்

இவ்வாண்டு நவம்பர் மாதம் அமெரிக்காவில் நடைபெறவிருக்கும் ஜனாதிபதி பொதுத் தேர்தலுக்கு ரிபப்ளிகன் கட்சியின் பிரதிநிதியாக கோல்டுவாடர் என்பவர் நியமனம் பெற்றுள்ளார் என்றும், இதே கட்சியின் சார்பாக வில்லியம் ஸ்கரான்டன் என்பவர் [இன்றைய பென்ஸில்வேனியா கவர்னர்] நிற்பதற்கு அபேக்ஷை கொண்டிருந்த போதிலும் கட்சி கோல்டு வாடரைத் தான் ஆதரித்துள்ளது என்றும் சொல்லப்படுகிறது. கோல்டுவாடர் நியமனம் பெற்ருல் ரிபப்ளிகன் கட்சியே அழிந்து விடும் என்று பலர் யூ. எஸ்ஸில் அபிப்பிராயம் கொண்டுள்ளார்கள் என்றும் சொல்லப்படுகிறது.

பாரி கோல்டுவாடர் என்பவர் யார்? சிறுபான்மைக் கட்சியாகிய ரிபப்ளிகன் கட்சியின் பிரதிநிதியாக இவர் தேர்ந்தெடுக்கப் படுவானேன்? இக்கட்சியைச் சேர்ந்த மிதவாதிகளும், லிபரல்களும் இதையொட்டி செய்யப்போவதென்ன என்ற கேள்விகள் பிறக்கின்றன.

வாஷிங்டன் நகரில் நடைபெற்ற ஓர் தேநீர் விருந்தில் கோல்டுவாடரைச் சந்தித்த ஒரு நண்பரிடம் கோல்டுவாடர் தனக்கு பட்டப் படிப்பு இல்லாததைக் குறிப்பிட்டு வருந்தி "நான் பல்கலைக் கழகத்தை விட்டு படிப்பைப் பூர்த்தி செய்யாமல் வெளி வந்தது ஓர் பெரிய தவறு என்று இப்பொழுது உணர்கிறேன்" என்று கூறியுள்ளார். அரிஸோனு மாநிலத்தைச் சேர்ந்த இவர் பார்வைக்கு வனப்புடன் தோற்றமளிக்கிருர். யூ. எஸ். ஸெனேட் அங்கத்தினராகிய இவர் கபடமற்றவர் என்றும் மிகவும் விரும்பத் தக்கவர் என்றும் சொல்லப்படுகிறது.

இவர் காலஞ்சென்ற ஜனாதிபதி கென்னடியின் நண்பரும் ஆவார். கடந்த இரண்டு ஆண்டுகளாக யூ. எஸ்ஸில் உள்ள ஒவ்வொரு மாநிலத்திற்கும் விஜயம் செய்து சொற்பொழிவாற்றி இவர் கட்சிக்கு நிதி திரட்டியுள்ளார். கட்சியின் வலது சாரியர்களின் ஆதரவை இவர் பெரும்பாலும் பெற்றுக் கொண்டிருக்கிருர். இவர் "கன்ஸர்வேடிவ்" மனப்பான்மை கொண்டவர் ஆகையால் பழய பழக்க வழக்கங்களிலிருந்து பெருத்த மாறுதல்களை விரும்பமாட்டார்.

பொருளாதாரத் துறையில் நிர்வாகத்தின் தலையீடு இல்லாமல் வர்த்தகம் பெருக வேண்டும் என்றும், அந்நிய நாட்டு உறவில் நம்நாடு வன்மையான மனப்பான்மையை வளர்க்க வேண்டும் என்றும், கம்யூனிஸ சீனு யூ. எஸ்ஸில் இடம் பெற்ருல் யூ. எஸ்., யூ. என்னை விட்டு வெளியேற வேண்டும் என்றும் இவர் கூறுகிருர். தவிர, இப்பொழுது தென் வியட்நாமில் நடைபெறும் போரை வடக்கு திக்குக்கு விஸ்தரித்து வெற்றிபெற வேண்டும் என்றும் அவா கொண்டுள்ளார். காஸ்ட்ரோவின் பெருத்த விரோதி இவர் என்பது வெட்ட வெளிச்சம்.

இப்பொழுது தேர்தலில் வெற்றி பெறுவதற்கு இவர் பொது மக்களின் ஆதரவைப் பெற வழி தேட வேண்டும். இதையொட்டி நாட்டில் ஜனாதிபதி தேர்தலுக்காகத் தனக்குள்ள ஆதரவைக் கண்டறிய 16 பிரதம மாநிலங்களில் புலனறிய வேண்டும்.

[1960 இல் கென்னடி தன்னுடைய வெற்றிக்கு முட்டுக்கட்டைகள் போல குறுக்கே நின்ற தனது இளமை, செல்வம், மதம் முதலிய இவைகளை அகற்ற அவ்வாறே செய்ய நேரிட்டது] குறிப்பிட்ட மூன்று மாநிலங்களாகிய நியூஹாம்ஷைர், ஆரிகான், கலிஃபோர்னியா, இவ்விடங்களில் அபேக்ஷகர்களின் வாய்ப்புகளைப் பரிசோதித்த பொழுது நியூஹாம்ஷைரில் கோல்டுவாடருக்கு இரண்டாவது ஸ்தானம் கிடைத்தது.

முதல் ஸ்தானத்தைப் பெற்றவர் தூதர் ஹென்ரி கபோட் லாட்ஜ். ஆரிகானில் இவர் பெற்றது மூன்ருவது ஸ்தானம். முதல் ஸ்தானத்தை ராக்ஃபெல்லரும், இரண்டாவதை கபோட் லாட்ஜும் பெற்ருர்கள். ஆனுல், கலிஃபோர்னியாவில் இவர் முதல் ஸ்தானத்தைப் பெற்ருர். இம்மாநிலத்தில் இவர் பெற்ற வெற்றியின் காரணமாகப் பலர் இவருக்கு ஆதரவு தர முன்வருவார்கள் என்று எண்ணப்படுகிறது.

தென்பகுதி இவருக்கு முழு மனதுடன் ஆதரவளிக்க முன்வருமா என்பது ஓர் பிரச்னையாகத் தோன்றுகிறது. ஏனெனில், இப்பகுதியில் 1870 ஆம் ஆண்டிலிருந்து இதுவரை ஒரு ரிபப்ளிகன் கட்சி அபேக்ஷகரும் வெற்றி பெற வில்லை. 1964-ல் அவர்கள் இந்நாட்களாகக் கொண்ட மனப்பான்மையை மாற்றுவார்களா என்பது சந்தேகம். மேலும், இப்பொழுது பதவி வகித்திருக்கும் ஜனாதிபதி லிண்டன் ஜான்ஸன் இப்பகுதியைச் சேர்ந்தவர் என்பது குறிப்பிடத்தக்கது.

சில அரசியல் பார்வையாளர்கள் கோல்டுவாடரின் முன்னேற்றம் கட்சியில் ஓர் ஒழுங்கற்ற நிலையை விளைவித்துள்ளது என்று கூறுகிருர்கள். இத்தகைய ஓர் நிலையை உருவாக்க ஜனாதிபதி லிண்டன் ஜான்ஸன் அவர்களின் இராஜ தந்திரமே காரணமாகயிருக்கலாம் என்றும் கருதுகிருர்கள்.

ஆனுல், அரசியலில் எதிர் பாராத சம்பவங்கள் நிகழ்வது சர்வ சாதாரணமே. ரிபப்ளிகன் கட்சியைச் சேர்ந்த மிதவாதிகளும், லிபரல்களும், ஒன்று சேர்ந்து கோல்டு வாடருக்கு ஆதரவளித்தால் ஒரு சமயம் இவருக்கு அது பலனளிக்கலாம். ஆனுல், இவர்கள் ஒன்று சேர்வார்களா என்பது ஓர் கேள்விக்குறி. அமெரிக்க மக்கள் தேர்தலில் யாது செய்யப்போகிருர்கள் என்று கூறுவது ஹேஷ்யமாகயிருந்த போதிலும் ஜனாதிபதி ஜான்ஸன் தனக்கு 50 மாநிலங்களின் ஆதரவும் கிடைக்கும் என்று கூறுகிருர்.

கோல்டு வாடருக்குத் தொழிலாளர்களுடைய ஆதரவு கிட்டுவது துர்லபம். ஏனெனில், இவர் ஸிவில் உரிமை மசோதாவை எதிர்த்து வாக்களித்துள்ளார். ஒவ்வொருவரும் வேலை செய்தாக வேண்டும் என்ற சட்டத்திற்கும் இவர் ஆதரவளித்துள்ளார். [இச்சட்டம் அமுலானுல் தொழிலாளர் சங்கங்களுக்கு ஊறு விளைவிக்கும்.]

தென் பகுதியில் ஜான்ஸன் பெருத்த அளவுக்கு ஆதரவை எதிர்பார்த்த பொழுதிலும், மிஸிஸிபி, அலபாமா, இவ்விரு மாநிலங்களும் ஜார்ஜ். ஸி. வாலஸ் [இன்றைய அலபாமா கவர்னர்] அவர்களைத் தான் ஆதரிக்கும். வாலஸ் அவர்களும் ஜனாதிபதி தேர்தலுக்கு ஓர் அபேக்ஷகர் என்பதை நினைவில் கொள்ளல் வேண்டும்.

சிறுபான்மைக் கட்சியாகிய ரிபப்ளிகன் கட்சிவெற்றி பெற வேண்டும் என்ருல் அக்கட்சி ஜனநாயகக் கட்சியின் ஆதரவை ஓர் சிறிதளவு பெற வழி தேட வேண்டும் என்றும், வேறு வழியில்லை என்றும் எண்ணப்படுகிறது.

★

---

உங்களுக்குத் தெரியுமா?

## பிணம் தின்னும் மக்கள்!

ஒரு மனிதனை இன்னொரு மனிதன் கொன்று தின்ற காலம் ஒன்று இருந்தது. அதுதான் மனிதன் நாகரிகமடையாது காட்டுமிராண்டிகளாக வாழ்ந்த காலம். நாளடைவில் மனிதன் நாகரிகத்தில் முன்னேற, இக்கொடிய, அநாகரிக வழக்கம் மங்கி மறையலாயிற்று.

எனினும், மனிதன் முன்னேறி விண்வெளியையும் வென்றுவிட்ட இந்த இருபதாம் நூற்றுண்டில் கூட உலகின் சில பகுதிகளில் மனித மாமிசம் சாப்பிடும் மக்கள் வாழ்ந்து கொண்டுதான் உள்ளனர்.

இலத்தீன் அமெரிக்காவில் உள்ள பராகுவே இராச்சியத்தில் பெரும் பகுதி இன்றும் காடுகள் நிறைந்த பிரதேசமாகும். மனித மாமிசம் சாப்பிடும் வழக்கமுள்ள நாகரிகமற்ற ஒரு சாதியார் இந்தக் காட்டுப் பகுதியில் வசிக்கின்றனர்.

ஒரு மனிதன் இறந்ததும் அவனது பிணத்தைச் சமைத்துச் சாப்பிடுவது இந்தக் காட்டு சாதியினரின் வழக்கமாகும். அவர்கள் பிணத்தைச் சாப்பிட்ட பிறகு, எஞ்சியிருக்கும் எலும்புகளை தமது வில்லுகளிஞல் அடிப்பார்கள்.

ஒவ்வொரு மனிதனுக்கும் ஒரு கெட்ட ஆத்மா இருக்கிறது—இப்படி வில்லுகளால் அடிப்பதால் அந்தக் கெட்ட ஆத்மா அகன்றுவிடுகிறதென்பது அவர்கள் நம்பிக்கை. இவர்கள் பிணங்களைப் புசிப்பதை ஒரு சமயச் சடங்காகவே கருதுகின்றனர்.

இறந்தபின் கெட்ட ஆத்மா திரும்பி வந்து தமக்குத் தொந்திரவு செய்யக் கூடும் என்ற பயம் இவர்களிடம் நிலவுவதால், அந்தக் கெட்ட ஆத்மா திரும்பி வராமல் இருக்க அனைவரும் ஒன்றுகூடி செத்தவனின் எலும்புகளைச் சுட்டுப் பொசுக்கிச் சாம்பலைப் பாதுகாப்பாக வைக்கின்றனர்.

தென்னை இனத்தைச் சேர்ந்த மரங்களில் ஒரு வகைப் புழுவை வளர்த்து அப்புழுக்களை இவர்கள் மிகப் பிரியத்துடன் சாப்பிடுகின்றனர்.

அதே பிரதேசத்தில் வாழும் மற்ருெரு சாதியாரிடம் நரமாமிசம் உண்ணும் பழக்கம் கிடையாது. ஆனுல் ஒரு விநோதமான வழக்கமுண்டு. வேட்டையாடுவதில் மிக்க திறமைசாலிகளான இவர்கள் ஒரு போதும் தாம் வேட்டையாடியதைத் தாமே சாப்பிட மாட்டார்கள். அதைப் பிறருக்குக் கொடுத்துவிட்டு, அவர்களிடமிருந்து வேறு எதையும் பெற்றுத் தான் உண்பார்கள். இந்த நியதியிலிருந்து மாறுபடுவது பாவமென அவர்கள் கருதுகின்றனர்.

— சுதந்திரன்.

குழந்தைகளின் புஷ்டிக்கு ரமணீஸ் பேபிக்ரைப்
சகல நோவுகளுக்கு எல்லீஸ்பாம்
காயம் சொரி சிரங்குகளுக்கு சைபால்
தி சௌத் இந்தியன் மான்யுபாக்சரிங் கம்பெனி. மதுரை.

இந்தியாவின் சிகரஜோதி
COMPOUNDED ASAFOETIDA
LG
REGD. TRADE MARK
கூட்டுப் பெருங்காயம்
குடந்தை கோயில்
உங்கள் நாவே நற்சான்று
லால்ஜி கோதுஃகோ. கும்பகோணம்

அமுத வாக்கு
வெற்றி வாழி! வீரம் வாழி!
பக்தி வாழி! பலபல காலமும்
உண்மை வாழி! ஊக்கம் வாழி!
அசோகா பாக்கு
No. 1506 அசோகா MILD SCENTED ASOKA நெ. 1506

கூட்டிங், ஷர்ட்டிங் ரகங்களும் எங்களிடம் பார்க்கத்தகுந்தவை எல்லாவிதமான ஜவுளிகளும் கிடைக்கும்
பி.ரா. நாராயணசாமி அய்யர்
ஜவுளி வியாபாரம்
பெரியகடை வீதி திருச்சிராப்பள்ளி. 8.
பிராஞ்சு: பான்ஸி ஹால் சைனுபஜார் திருச்சி.
மில் ஜவுளிகள் எங்களிடம் சில்லரை வியாபாரிகளுக்கு மொத்தமாக கிடைக்கும்.

சோவியத்தில்

# தென்னிந்திய ஆராய்ச்சி

— எல். அலயேவ்

சுமார் 10 ஆண்டுகளுக்கு முன்னர் எனது விஞ்ஞான ஆலோசகரான பேராசிரியர் ஐ. ரெய்ஸ்னரிடம் நான் தென்னிந்திய கிராமப் புற சமூக வரலாறு பற்றி ஆராய்ச்சி செய்ய விரும்புவதாகக் கூறினேன். அவர் என்னை சந்தேகத்தோடு நோக்கிப் பின்கண்டவாறு கூறினுர்:

"தென்னிந்தியாவைப் பற்றியா? ஆனுல் இதுவரை நமது கல்லூரியில் தென்னிந்தியாவைப் பற்றி யாரும் ஆராய்ச்சி செய்ததில்லை என்பதுதான் உங்களுக்குத் தெரியுமே. மேலும், இது பற்றி போதுமான தகவல்களும் இல்லை. எனவே, உங்களால் இந்தப் பணியை நிறைவேற்ற முடியுமா என்பது எனக்குத் தெரியாது. எனினும் முயற்சித்துப் பாருங்கள். இது மிகவும் முக்கியமான, சுவையான ஆராய்ச்சியாக இருக்கும்."

15 வது நூற்ருண்டு வாக்கில் ரஷ்ய வர்த்தகரும், யாத்ரீகருமான அபனுசி நிகிதின்தான் முதன் முதலாக தென்னிந்திய வரலாறு பற்றி ஆராய முயற்சித்தார். அவர் தக்காணத்துக்கு வருகை வந்து, பாமினி அரசு பற்றி எழுதினுர். துரதிர்ஷ்டவசமாக இந்த முயற்சி பின்னுல் தொடரப்படவில்லை. ரஷ்யாவில் 18 வது 19 வது நூற்ருண்டுகளில் சமஸ்கிருதம், பாலி மொழிகளிலுள்ள இலக்கியங்கள் பற்றியும், பௌதீதம் பற்றியும் நாடோடி இலக்கியம் பற்றியும்தான் பிரதானமாக ஆராய்ச்சிகள் நடத்தப்பட்டன.

அக்காலத்தில் தென்னிந்திய வரலாறு பற்றி மிகக் குறைவாகவே ஆராய்ச்சி செய்யப்பட்டது. கே. எம். பணிக்கர் இதைப் பின்வரும் வார்த்தைகளில் மிக வருத்தத்தோடு கூறுகிருர்: "ஆரம்பகால இந்திய வரலாறுகளைப் படிக்கும் எவரும் விந்தியத்துக்குத் தெற்கே இந்தியாவே இல்லை, அப்படியிருந்தாலும் அது வடக்கத்திய சாம்ராஜ்யங்களின் ஒரு துணை உறுப்பாகவே இருந்தது என்றே எண்ணுவர்."

தென்னிந்திய விஜய நகர சாம்ராஜ்யம் பற்றி 1900 ல் ஒரு வரலாற்று நூலைப் பிரசுரித்த ஆர். செவல் கூட தமது நூலுக்கு "மறக்கப்பட்ட சாம்ராஜ்யம்" என்று பெயரிட்டதை இங்கு குறிப்பிடவேண்டும்.

எனினும், அண்மை வருடங்களில் நிலைமை கணிசமாக மாறியிருக்கிறது. திருவாளர்கள் நீலகண்ட சாஸ்திரி, டி. மகாலிங்கம், ஏ. அப்பாதுரை, ஹெச். செர்வானி, ஜி. யஸ்தானி, சத்தியனுத அய்யர், இன்னும் இதரர்கள் எழுதிய நூல்களின் மூலமாக தென்னிந்திய வரலாறு இந்திய சரித்திரத்தின் ஒரு சுயேச்சையான, முக்கியமான பகுதியாக ஆகி வருகிறது.

சோவியத் யூனியனிலும் தென்னிந்திய வரலாறு பற்றிய ஆராய்ச்சியில் குறிப்பிடத் தக்க மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. உதாரணமாக, திராவிட மொழிகளைப் பற்றிய ஆராய்ச்சிகள் துவக்கப்பட்டுள்ளன. தமிழ்—ரஷ்ய அகராதி ஒன்று பிரசுரிக்கப்பட்டுள்ளது.

இந்தியா உள்பட இதர நாடுகளிலுள்ள திராவிட மொழியியலாளர்களுடன் ஸ்திரமான விஞ்ஞானத் தொடர்புகள் ஏற்படுத்திக் கொள்ளப்பட்டுள்ளன. இந்தத் தொடர்புகள் மென்மேலும் வளந்தோங்கி வருகின்றன.

இதுமட்டுமல்ல, தென்னிந்தியா பற்றி பல நூல்கள் தொடர்ந்து வெளியிடப்பட்டு வருகின்றன. இதற்கு எடுத்துக்காட்டாக ஏ. பியாட்டிகோர்ஸ்கி எழுதிய தமிழ் தத்துவஞான வரலாற்றைக் குறிப்பிடலாம். இந்த நூல் முதல் சங்கம் தோன்றியதிலிருந்து ஆரம்பித்து 13 வது நூற்ருண்டு வரையுள்ள பண்டைய, மத்திய கால தமிழ் இலக்கியங்களை சோவியத் வாசகர்களுக்கு அறிமுகப்படுத்துகிறது. மேலும், இந்த நூல் இந்திய அறநெறிக் கோட்பாடுகள், அஜிவாகம், லோகாயதம் போன்ற பொருள் முதல்வாத சித்தாந்தங்கள், சைவ— பக்தி இயக்கம் முதலியவற்றை சவிஸ்தாரமாக விளக்குகிறது.

அதோடு, "புறநானூறு", "குறள்", "நாலடியார்", "மணிமேகலை", "சிவஞான போதம்" முதலிய புகழ்பெற்ற தமிழ் நூல்களிலிருந்து முக்கிய பகுதிகள் மொழிபெயர்க்கப்பட்டு இந்த நூலில் இடம் பெற்றுள்ளன.

திருவள்ளுவரின் "குறள்" பூரணமாக மொழிபெயர்க்கப்பட்டு பெரிய பதிப்பாக வெளியிடப்பட்டுள்ளது. செக்கோஸ்லேவேகிய திராவிட மொழியியல் அறிஞரான சுவலபில் இதைப் பதிப்பித்துள்ளார். பலராமமூர்த்தி எழுதிய "ஆந்திர மக்களின் சுருக்கமான வரலாறு" என்னும் நூல் தெலுங்கிலிருந்து ரஷ்ய மொழியில் பெயர்க்கப்பட்டுள்ளது.

தென்னிந்தியாவின் அரசியல், சமூக, பொருளாதார வரலாற்றை ஆராய்வதற்கு கல்வெட்டுகள் ஒரு முக்கிய ஆதாரமாக இருந்து வருகின்றன. அண்மை வருடங்களில் இந்தக் கல்வெட்டுகள் பற்றிய ஆராய்ச்சி தீவிரமடைந்துள்ளது. 10–13 வது நூற்ருண்டுகளில் தென்னிந்தியாவில் நகரப் புறங்களின் வளர்ச்சி பற்றி ஆய்வு நடந்து வருகிறது. தமிழ் நாட்டில் ஊர், சபை, நகரம் என்று வழங்கப்பட்டு வருவது பற்றி இந்த ஆராய்ச்சி பல புதிய தகவல்களைத் தரும் என்று நம்புகிருேம். இது தவிர, இந்தக் கட்டுரையாளனுகிய நான் கல்வெட்டுகளையும், அந்நிய யாத்திரீகர்களின் பிரயாண அனுபவங்களையும், பிரிட்டிஷ் வரி விதிப்புக் கணக்குப் புத்தகங்களையும் ஆதாரமாகக் கொண்டு 14 முதல் 18 வது நூற்ருண்டு வரை தென்னிந்தியாவின் பொருளாதார சரித்திரத்தை ஒரு நூலாக எழுதி முடித்துள்ளேன்.

பதினெட்டாவது நூற்ருண்டின் பிற்பகுதியைச் சேர்ந்த மைசூரின் வரலாற்றையும் பிரிட்டிஷாரை எதிர்த்து ஹைதர் அலியும் திப்பு சுல்தானும் நடத்திய யுத்தங்களையும் பற்றி ஆராய்ச்சி செய்வதில் சோவியத் அறிஞர்கள் கணிசமான பங்காற்றியிருக்கிருர்கள் என்று சொன்னுல் அது மிகையாகாது. திப்பு சுல்தான் பிரெஞ்சுக்காரர்களோடு நடத்திய கடிதப் போக்குவரத்தை கே. அன்டோனேவா பிரசுரித்துள்ளார். இந்தக் கடிதப் போக்குவரத்து இதுவரை வெளி உலகுக்குத் தெரியாததாகும். "இந்தியாவை பிரிட்டிஷார் வெல்லுதல்" என்னும் அவரது நூலில் காலனி ஆதிக்க வாதிகளை எதிர்த்து மைசூர் நடத்திய போராட்டத்திற்குப் பெரும் பகுதி இடம் ஒதுக்கப்பட்டுள்ளது.

இது தவிர, ஏ. காசிமோவ் திப்பு சுல்தானைப் பற்றி ஒரு சுவையான நூல் எழுதியுள்ளார். இந்த வருடம் ஆர். ஆப்ரமியான் என்னும் இளம் ஆர்மீனிய வல்லுநர் பழைய ஆர்மீனிய மொழியான கிராபரிலிருந்து பதினெட்டாவது நூற்ருண்டைய தென்னிந்தியாவின் வரலாற்றுக்குப் பல ஆதாரங்களைத் தேடிப் பிடித்து ஆய்ந்து மொழி பெயர்த்திருக்கிருர். இந்த ஆதாரங்களில் ஆர்மீனிய வணிகரமான ஏ. சிமோனியான் தொகுத்த "ஹைதரலியின் வாழ்க்கை வர்ணனை" ஒன்ருகும்.

தென்னிந்தியாவின் வரலாறு, கலாச்சாரம் பற்றிய பல பிரச்சினைகள் இன்னும் சிக்கறுக்கப்படாமலிருக்கின்றன. எனினும் கடந்த சில வருடங்களில் இந்தத் துறையில் விரிவான முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது. இப்போது நாங்கள் "மத்திய கால இந்தியாவின் வரலாறு" என்னும் நூலை வெளியிட தயாரிப்புகள் செய்து வருகிருேம். இந்த நூலில் தென்னிந்தியாவின் வரலாறும் ஒரு முக்கியமான இடம் பெறும் என்பதில் சந்தேகமில்லை.

★

காமராஜ்

## ஒரு கால சக்தி

— எஸ். கே. பட்டில்

★

தமிழ் நாட்டின் தலைவர் என்று மட்டும் ஸ்ரீ காமராஜைக் கருத வேண்டாம். சென்னையில் முதன் மந்திரியாக அவர் திறமையாகப் பணியாற்றினுர். இன்று அகில இந்தியாவுக்கும் அரிய தலைவராக அவர் உயர்ந்துள்ளார். இந்த நாட்டின் தலைவிதியை நிர்ணயிக்கும் தலைவர் அவரே.

இந்தியாவின் எதிர்காலம் அவர் கையில் உள்ளது. மிகவும் குழப்பமான நிலைமையில் "காமராஜ் திட்டத்தை உருவாக்கி"த் தந்து நாட்டை நோக்கிய கடுமையானப் பிரச்னையைத் தீர்த்தார். படிப்படியாக அவர் உயர்ந்துள்ளார்.

காந்திஜி காலத்தில் நேருஜி, பட்டேல் போன்ற தலைவர்கள், அவர் தயாரிப்பில் உருவாகி நாட்டின் எதிர்காலப் பொறுப்பை ஏற்கத் தயாராயிருந்தார்கள்.

இந்தியாவின் க்ஷேமத்துக்கு அப்போது ஒரு குறையும் இல்லை. ஆனுல் நேருஜிக்குப் பிறகு நிலைமை வேறு விதமாக இருந்தது. நேருவுக்குப் பின் தலைமை யாருக்கு என்ற பிரச்னை உலகப் பிரச்னையாக இருந்தது.

அந்தப் பிரச்னையை வெகு திறமையாகச் சமாளித்தார் காமராஜ். ஜனநாயகம் சாகவில்லை. உயிருடன் விழிப்புடன் செயல்படுகிறது என்பதை உலகுக்கு நிருபித்தவர் காமராஜ்.

பிரதமர் தேர்தலை வெற்றிகரமாக நிறைவேற்றி, லோகசபை, ராஜ்ய சபை எல்லா இடத்திலும் அதற்குச் சாதகமான சூழ் நிலையை உருவாக்கி ஜனநாயக முறையில் அவர் ஆற்றியுள்ள அருஞ்செயல் பாராட்டத்தக்கது. சாஸ்திரிதான் எல்லாரும் விரும்பும் அடுத்த பிரதமர் என்று கூறி காமராஜ் அவரைத் தேர்ந்தெடுத்தார்.

காமராஜ் பணி அத்துடன் முடிந்துவிட வில்லை. அவரன்றி வேறு யாரேனும் இருந்தால் இம்மாதிரி ஒரு சுமுகமான தீர்வை நாம் அடைந்திருப்போமா என்பது சந்தேகமே. பாரதத் தலைவராக விளங்கும் அவர் ஜனநாயகத்துக்கு வழி காட்டுகிருர். பல கோடி மக்கள் கொண்ட நம் நாட்டில் வயது வந்தோர்க்கெல்லாம் வாக்குரிமை அளித்து நாம் நடத்திய பொதுத் தேர்தல்களைக் கண்டு உலகம் வியந்தது. காங்கிரஸின் அரிய சாதனை இது.

உலக அதிசயங்களில் இது ஒன்று. வேறு எங்கும் காண முடியாத அற்புதம். உலகில் மிகப் பெரிய ஜனநாயக அமைப்பைக் கொண்ட நாடாக இருப்பதால் எதிர்காலத்தை நிர்ணயிக்கும் பொறுப்பில் உள்ள அவர் உலகத் தலைவராகவே விளங்குகிருர்.

★

அமிர்தாஞ்சனம்
இப்பொழுது
புதியதொரு சிக்கன
உறையில் கிடைக்கிறது
AMRUTANJAN
Pain Balm
அமிர்தாஞ்சனம் லிமிடெட். சென்னை, பம்பாய்.

ஸ்ரீ அம்பாள்
ஆபீசர் பொடி
அனைவரும் விரும்புவது
10¢25-கிராம் டின்களிலும் கிடைக்கும்
ஸ்ரீ அம்பாள் & கோ. துங்கசாலை தெரு, மதராஸ்.

கரூர்

# தமிழ் எழுத்தாளர் சங்கம்

**கவிஞர் கொத்தமங்கலம் சுப்புவுக்கு பாராட்டு**

★

கரூர் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் சார்பில் 19—7—64 ந் தேதி கவிஞர் கொத்தமங்கலம் சுப்பு அவர்களுக்கு ஓர் பாராட்டு விழா நடைபெற்றது. திரு. ஆர். ராமமூர்த்தி பி. ஏ. பி. எல்., அவர்கள் தலைமை வகித்தார். திரு. பி. காசி விசுவலிங்கம் வரவேற்புரை நிகழ்த்த, திரு. கே. ஆர். பசுபதி பாராட்டு மடல் வாசித்து அளித்தார்கள். கவிஞரின் தமிழ்த் தொண்டினைப் பாராட்டி வழக்கறிஞர் திரு. கே. முத்துராமலிங்கம் அவர்களும், திரு. எம். கோவிந்தராஜு பிள்ளை அவர்களும் வாழ்த்துரை வழங்கினர்.

பாராட்டுக்கு நன்றி தெரிவித்து, கவிஞர் அவர்கள் பேசும்போது தமிழ் நாட்டில், பாரதிக்கு முன், படித்தவர்களும், பண்டிதர்களும் மட்டுமே கடும் தமிழ் நடையை கையாண்டு வந்தார்கள். அந்த சம்பிரதாயத்தை முறியடித்து, பாமரனும் படித்து மகிழும் வண்ணம் மகாகவி பாரதியார், எளிய இனிய தமிழில் பாடினார்; எழுதினார். அவரது பாடல்கள் எல்லாம், நமது பண்டைய காலத்து கலாச்சாரத்தையும், பண்பாட்டையும் மேன்மைப் படுத்திக் காட்டுவன. கண்ணனின் பாடல்கள், பாஞ்சாலி சபதம்; இவைகள் நமது உபநிஷத, கீதையின் சாரங்கள். அவைகளை வைத்துக் கொண்டு, தன்னுடைய கைவண்ணத்தால், எளிமையான தமிழில், எல்லோருக்கும் புரியும்படி பாடினார் பாரதியார். அந்த வழியேதான் என்னுடைய பாடல்களுக்கும் வழி காட்டியது. நான் பள்ளிக்குச் சென்றதெல்லாம், மிகக் குறைவு. எனது சித்தப்பா தான் எனக்கு மூதன் முதல் பாட்டுக்களைச் சொல்லிக் கொடுத்தவர்.

என்து ஏழு வயதில், தொட்டிலில் படுத்து உறங்கும் குழந்தைக்கு நான் தாலாட்டு பாடியதைக் கேட்ட அவர், என்னை தினம் தினம், இராமாயணம், மகாபாரதம், முதலிய பாடல்களில் இருந்து பாட்டுக்களையும், நாடோடிச் சந்தங்களில் பல பாடல்களையும் அடிக்கடிச் சொல்லி வந்தார். அவைகளில் மனம் செலுத்திய நான், என் நினைவு எடுத்த நாவுக்கு ஏற்ப தினம் பல பாட ஆரம்பித்தேன். அவைகளில் பல முருகன் கீர்த்தனைகள்; அவைகள் எல்லாம் மறைந்துகூட போய் விட்டன ஆம்! நான் என்ன தியாகராஜ சுவாமியா கீர்த்தனைகள் பாட!

என்னுடைய வாழ்க்கையின் அனுபவமும், தமிழ் மொழி மீது நான் கொண்ட அதிகமான பற்றுதலுமே என்னைப் பாட வைத்தன. புத்தகங்களை அச்சுப்போட இவ்வளவு முன்னேற்றம் இல்லாத அந்த நாளில், நான் பாடிய பாடல்கள் பல காற்றோடு மறைந்து விட்டது. சென்னைக்கு நான் வந்த பிறகுதான், புத்தகங்களை அச்சுப் போடும் பழக்கம் மிகவும் அதிகமாயின.

நான் எழுதுவதெல்லாம்; என் உள்ளத்தில் ஊறி கனன்று பொங்கி எழுந்தவை. என்னுடைய பாடல்களை பலர் பாராட்டினாலும், நான்தான் எழுதினேன் என்று தெரியாதவாறு, என் பெயரைப் போடாமலே எழுதி, அதைப் படித்துப் பாராட்டும் வாசகர்கள் முன்பு, ஐயா! அதை எழுதியவன் நான் தான் என்று மறைமுகக் கூறி மகிழும் போதுதான் என் உள்ளம் உவகையடைகிறது.

என்னுடைய "தில்லானா மோகனாம்பாளை" நான் எழுத ஆரம்பித்தபோது, என்னால் அதை இவ்வளவு தூரம் எழுத முடியுமா என்றுதான் இருந்தது. வாசகர்களின் இடைவிடாத ஊக்கமும்–உற்சாகமும்தான் என்னை எழுத வைத்தது. எழுத்தாளன் அவன் படைக்கும் நவீனத்தை–பலர் படித்துப் பாராட்டும் போது அடையும் இன்பத்தைப் போல வேறு இன்பம் ஒன்றுமே இல்லையெனலாம்.

எழுத்தாளர்கள் பேனாவை எடுக்கும் போது பயபக்தியோடுத் தொடவேண்டும். பேனாவின் முனை போர் முனையில் நிற்கும் வீரனின் ஈட்டி முனை போன்றது. அதை நாம் செம்மையாக, நல்லவைகளுக்கே பயன்படுத்த வேண்டும். சமுதாயம் மலர, நல்ல பழக்கங்கள் எண்ணங்கள் கற்பனைகள், மிளிர வேண்டும். நாட்டின் முன்னேற்றம், நல்ல பேனா பிடித்தவன் கையில் இருக்கிறது. அந்த வகையில் எழுத்தாளர்கள் கடைப்பிடித்து, நல்ல எழுத்துக்களை எழுதி நாளெல்லாம் தமிழ் அன்னையின் திருக்கோயிலை வலம் வர எல்லாம் வல்ல முருகக் கடவுள் அருள் புரிவாராக எனக் கூறி எழுத்தாளர்களை ஆசி கூறினார்.

முடிவில் செயலாளர் கி. கோவிந்தராஜன் கவிஞரின் சிறப்பான இயல்புகளைக் கூறி அவர் நீடூழி வாழ்ந்து தமிழ் அன்னைக்குத் தொண்டு செய்ய வேண்டிக் கொண்டு நன்றி கூறினார். பின்னர் நாரதகான சபையில் "வீரஜவாஹர்" என்னும் கதாகாலக்ஷேபம் கவிஞர் சுப்புவால் நடத்தப் பட்டது.

★

காமராஜ்

## நேருவுக்குப் பின் இவரே

— ஓ. வி. அளகேசன்

ஓ. வி. அளகேசன் பேசுகையில், 'சரித்திரம் கண்டிராத இந்த ஊர்வலத்துக்கும் பொதுக் கூட்டத்துக்கும் என்ன பொருள்?' என்று வினவி, 'நேருவுக்குப்பின் யார்?' என்று உலகம் கேட்டது. "நேருவுக்குப் பின் காமராஜ்" என்பதே பதில். அந்தப் பதிலையே இங்கு காண்கிறோம் என்றார்.

அவர் மேலும் கூறுகையில், காமராஜ் நாட்டின் நிலைமை உணர்ந்து, காங்கிரஸில் "சொல்லாமல் சொல்லி" சாஸ்திரியைப் பிரதமராகத் தேர்ந்தெடுத்தார். காமராஜ் அப்போது ஆற்றிய உரை முக்கியமானது. "நேருவுக்குப் பின் நாம் சின்ன தப்பு செய்தாலும் மக்கள் நம்மென்னியைப் பிடித்து விடுவார்கள்' என்றார் காமராஜ். அதை காங்கிரஸ்காரர்கள் என்றும் நினைவில் கொள்ளவேண்டும். அவரது புகழ் நாட்டுக்குப் பயன்படும் நல்ல புகழ். அவரது வெற்றியின் ரகசியம் இதுதான். மக்கள் மனதில் உள்ள ஆசை, நோய் அனைத்தும் அவர் அறிவார். காந்திஜியாலோ, நேருஜியாலோ நேரடியாகப் பயிற்றுவிக்கப் படாமலிருந்தும் காமராஜ் இத்தகைய உயர் நிலை எய்தியுள்ளதற்கு மக்களை அவர் அறிந்துள்ள சிறப்பே காரணம். ஏகலைவன் போன்று, காந்திஜி, நேருஜி போன்ற தலைவர்களிடம் விசுவாசுத்துடன் இருந்து வந்துள்ளார். அதுவே அவர் புகழ் உயரக் காரணமாயிருந்தது.

நேரு ஒப்பற்ற தலைவர், அவருக்குப் பின் நாம் அவரைப் போன்ற தலைமையைக் காணமுடியாது ஆகவே கூட்டுத் தலைமையிலேயே இயங்க வேண்டியிருக்கிறது. கூட்டுத் தலைமைக்கு காமராஜரின் தலைமை இன்றியமையாதது என்று கூறினார்.

**அரியலூர் டி. மு. கோ.**
S.C. 689/58; E.P. 375/64

மீனாக்ஷி அம்மாள் –வாதி
மூக்கன் சாம்பான்–1, முத்தான் சாம்பான்-2, அழகன் சாம்பான்-3, செங்கான் சாம்பான்–4, செல்லம்மாள்–5, சேவி சாம்பான்-6
–பிரதிவாதிகள்

இந்த நெம்பரில் வாதி பெற்றிருக்கும் டிக்கிரியை நிறைவேற்ற மனு கொடுத்து ஆட்சேபணை நோட்டீசுக்கு உத்திரவாகி 11—8—64-ல் ஈரங்கி.

R. ராமஸ்வாமி,
1/6156/32 அட்வகேட்.

**அரியலூர் டி. மு. கோ.**
S.C. 320/57; E.P. 660/64
E. A. 575/64

பழனி அம்மாள் —வாதி
சாமிக்கண்ணு படையாச்சி (இறந்தார்) 1, ரத்தின படையாச்சி 2, வகையரு
—பிரதிவாதிகள்

இறந்த முதல் பிரதிவாதிக்கு வாரிசாகவும், 3 & 4 பிரதிவாதிகளாகவும் அவரது மனைவி அஞ்சலை அம்மாளையும், மகள் தனத்தம்மாளையும் சேர்த்து இவர்கள் பேரிலும் தாவா டிக்கிரியை நிறைவேற்றக் கோரி வாதி கொடுத்த மனு 13-8-64 காலை 10 மணிக்கு வாய்தா.

B. வெங்கடாசலம் பிள்ளை,
3/6170/34 அட்வகேட்.

## அண்ணாமலை வழிகாட்டுகிறது

இந்த ஆண்டு அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் வன மகோத்சவம் கொண்டாடப்பட்ட முறையானது பிற எல்லாப் பல்கலைக் கழகங்களும் பார்த்துப் பின்பற்றத்தக்க விதத்தில் ஒரு முன்னுதாரணமாக அமைந்திருந்தது. பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் சி. பி. இராமசாமி அய்யர் ஆலோசனைப்படியும் விருப்பப் படியும் நடைபெற்ற இவ்விழாவில் மாணவர்களும், ஆசிரியர்களும், அலுவலர்களும் சிறப்பான ஆர்வம் காட்டிப் பங்கு கொண்டனர். பல்கலைக் கழகத்தைச் சுற்றி நாலா பக்கங்களிலும் செல்லுகின்ற சாலைகளிலெல்லாம் அழகு மர வரிசைகளும் பயனற்றுக் கிடக்கின்ற தரிசு நிலங்களில் விறகுக்காக கூடிய மரங்களும் நூற்றுக் கணக்கில் நடப்பட்டன. மாணவர்கள் விடுதிகளில் பல்கலைக் கழக விவசாயத் துறையின் ஒத்துழைப்புடன் ஏராளமான மலர் மரங்களும், நிழல் மரங்களும் நடப்பட்டன.

அண்ணாமலை நகரில் ஒவ்வொரு வருடமும் வன மகோத்சவம் கொண்டாடப் படுகிறது. ஆயினும் இந்த வருடம் சிறப்பாகத் திட்டமிட்டு நடத்தப்பட்ட இக் கொண்டாட்டத்தில் பல்கலைக் கழகம் முழுவதுமே பெரிய விழாக் கோலம் பூண்டு தோற்றமளித்தது. பல்கலைக்கழக எல்லைக்குள் வசிக்கும் ஒவ்வொருவரும் இவ்விழாவை எல்லோருக்கும் பொது நன்மை பயக்கும் ஒன்றெனஉணர்ந்து ஒன்றுபட்டுச் செயலாற்றினார்கள்.

இதே போல இதர பல்கலைக்கழகங்களும், கல்வி நிறுவன்ங்களும் மரம் நடும் விழாவில் இவ்வித ஆர்வங் கொண்டு செயலாற்ற முன் வந்தால் வனமகோத்சவ முயற்சி நாட்டுக்குப் பெரும் பயனளிக்கும் ஒரு மாபெரும் வளர்ச்சித் திட்டமாக விளங்கும்.

★

## கால்நடைப் பண்ணை

கால்நடை அபிவிருத்திக்கு கேரளராஜ்யத்தில் மூனார் அருகே மாட்டுப் பட்டி என்ற இடத்தில் ஸ்விட்ஜர்லாந்து அரசாங்க ஒத்துழைப்புடன் பெரியதொரு கால்நடைப் பண்ணை இவ்வாண்டு மே மாத இறுதியில் நிறுவப்பட்டது. ஒரு கோடி ரூபாய் திட்டத்தில் ஆரம்பிக்கப்பட்டிருக்கும் இப்பண்ணை தென் மாநிலங்களுக்கே பெரியதொரு முயற்சியாக அமையும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

★

## திராட்சை

தமிழ் நாட்டில் திராட்சை சாகுபடியில் மதுரை மாவட்டந்தான் முன்னணியில் நிற்கிறது. பத்தாண்டுகளில் திராட்சை சாகுபடி விஸ்தீரணம் அந்த மாவட்டத்தில் ஏறத்தாழ நான்கு மடங்குக்கு மேல் பெருகியிருக்கிறது. இப்போது அங்கு திராட்சை சாகுபடியாகும் விஸ்தீரணம் 570 ஏக்கர் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. மிகத் தித்திப்பான விதையில்லாத திராட்சை கூட அங்கு பயிராகிறது.

★

மோட்டார் சாமான்களுக்கு
பரத் ஆட்டோ ஸ்டோர்ஸ்
போன்: 2359.
99. பட்டர்வர்த் ரோடு. திருச்சி. 2.

கரூர் P.S. ராமசர்மாவின்
சக்தி சஞ்சீவி
ஈரல் தலை கட்டிகளுக்கு சிறந்தது
விபரத்திற்கு எழுதுக.

எவரும் விரும்புவது
எங்கும் கிடைப்பது
வின்ஸெண்ட்
கனிச்சுவை பானங்களே,
VINCENT

சினோ பிரைமா
கெடியாரம்
உயர்ந்த ரகம்
விலை சாசம்
கண்ணன் & கோ
திருச்சிராப்பள்ளி.

தமிழ், ஆங்கில
காந்தீய
சர்வோதய
பூமிதான
கிராமதான
இலக்கியம்
பத்திரிகை
ஆகியவற்றிற்கு
சர்வோதயப்
பிரசுராலயம்
தஞ்சாவூர்.

கடலுக்குள்ளே

# ஆறுகள்-மலைகள்

மாபெரும் ஆற்றுக் குடைவுகள், இதற்கு முன் தெரிந்திராத பெரும் மலைகள், உலகிலேயே மிகச் செங்குத்தான கடல் படுகை இறக்கங்கள் ஆகியவை பெருங் கடலுக்கடியில் இருப்பதை சர்வதேச இந்தியப் பெருங் கடல் ஆய்வுக் குழு கண்டு பிடித்திருக்கிறது.

இந்தியப் பெருங்கடலில் மூன்று கோடி சதுர மைல் பிரதேசம் ஆராயப்படுகிறது இதில் அமெரிக்கா முக்கிய பங்கெடுத்துக் கொள்கிறது. இந்த ஆராய்ச்சியில் பெரும் முன்னேற்றம் காணப் பெற்றுள்ளது.

'பயனியர்' என்ற கப்பல் யு. எஸ். கடற்கரை, நிலப் பரப்பு ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ள யு. எஸ். கப்பலாகும். இதை மிதக்கும் ஆய்வுக்கூடம் என்றும் சொல்லலாம். ஆறு மாத காலத்தில் இந்தியப் பெருங்கடலில் 27,000 மைல் பயணம் செய்திருக்கிறது. இந்தியா, இந்தோனேசியா, மலேஷியா, பிலிபீன்ஸ், அமெரிக்கா முதலிய நாடுகளைச் சேர்ந்த விஞ்ஞானிகள் இக் கப்பலில் இருக்கின்றனர்.

இதன் தலைமை விஞ்ஞானி ஒரு புதிய கண்டுபிடிப்பை அறிவிக்கிறார். இது உண்மையில் பெரும் முக்கியத்துவம் படைத்த கண்டுபிடிப்பு என்றார். திரிகோணமலைக்கு 20 மைல் தெற்கே வங்கக் குடாக் கடலில் இலங்கை 40 டிகிரி கோணத்தில் சரேலென இறங்குகிறது.

இதற்கு முன்பு ஐரோப்பாவின் மேற்குக் கரை, அமெரிக்காவின் கிழக்கு மேற்குக் கரைகள் ஆகியவற்றில் கண்டுபிடிக்கப்பட்ட கடல் படுகை இறக்கங்கள் ஒரு டிகிரி கோணம் முதல் 15 டிகிரி கோணம் வரைதான் இருக்கின்றன. இலங்கையின் கிழக்குக் கரைக்கப்பால் பட்டிக்கொலாவுக்கு அருகில் கடலுக்கடியில் இரண்டு பெரிய ஆற்றுக் குடைவுகளும் கண்டு பிடிக்கப்பட்டன.

இந்த ஆற்றுக் குடைவுகளில் ஒன்று 7800 அடி ஆழம் இருக்கிறது. இது அமெரிக்காவில் கொலராடோ ஆற்றில் இருக்கும் 'கிராண்ட் கன்யான்' என்ற ஆற்றுக் குடைவை விட ஆழமாகவும் குறுகலாகவும் இருக்கிறது. இரண்டாவது ஆற்றுக் குடைவு, மேலே இரண்டு மைல் அகலமும், 4570 அடி ஆழமும் இருக்கிறது.

பலப்பல கடலடி மலைகளும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இம் மலைகளின் ஒன்றின் உச்சியைத் தேடிப் பிடிக்க நீர் மூழ்குவோர் அனுப்பப்பட்டனர். கடலுக்கடியிலிருந்து ஆயிரக்கணக்கான வண்ணப் புகைப் படங்கள் எடுக்கப்பட்டன.

அட்லாண்டிக், பசிபிக் பெருங்கடல்களில் மிக முக்கியமாக இருக்கும் பூமத்திய ரேகைப் பிரதேச கடலடி நீரோட்டங்கள் இந்தியப் பெருங் கடலில் கண்டு பிடிக்க முடியவில்லை.

ஸேஷெல்ஸ் தீவுகளைச் சுற்றி ஒரு பிரதேசத்தில் கருங்கல் பாறைகள் அடுக்கடுக்காக இருப்பது கண்டு பிடிக்கப்பட்டது. கடலில் இது இருப்பது மிக அபூர்வம். ஆஃப்பிரிக்கா அல்லது மடகாஸ்கரிலிருந்து துண்டிக்கப்பட்டப் பிரதேசமாகவோ வளர்ச்சி தடைப்பட்ட ஒரு கண்டமாகவோ இது இருக்கலாம்.

இந்தியப் பெருங்கடலில் வலச் சுழி ஒன்று இருப்பதை யு. எஸ். விஞ்ஞானிகள் கண்டுபிடித்துள்ளனர். இது பெரும்பாலான தேசப் படங்களில் காட்டப்பட்டிருப்பதற்கு மாறாகும். அந்தமான் தீவுகளுக்கு அருகில் ஒலியைச் சிதறடிக்கும் அடுக்குகள் ஆழத்தில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

இந்த அடுக்குகள் இரவில் கடலுக்கு மேல் வருகின்றன என்றும் அடுத்த நாள் காலையில் கீழே போய்விடுகின்றன என்றும் தெரிகிறது. இது கண்ணுக்குப் புலப்படாத சில நுண்ணிய உயிரணுக்களின் வேலையாக இருக்கலாம் என்று கருதப் படுகிறது.

m/s G. RADHAKRISHNA CHETTIAR Sons
Jewellers
TIRUCHY_8.
பவுன் நகைகள்
வெள்ளிப் பாத்திரங்களுக்கு
m/s G. ராதாகிருஷ்ண செட்டியார்-சன்ஸ். திருச்சி--8.
PHONE: 2037
TEL: RELIABLE.
மானேஜிங் பார்ட்னர் R. ஜெயதேவன்

கைத்தறி, பட்டு, நால் & மில் ஜவுளிகளுக்கு
M.N. நாகேந்திரம் சன்ஸ்
மலைவாசல்............திருச்சி.

# ஹிட்லரைப் பற்றி...

ஜெர்மனியில் 20 ஆண்டுகளுக்கு முன்பு சர்வாதிகாரி ஹிட்லரைக் கொலை செய்ய இராணுவத் தளபதி ஒருவர் முயன்றார். அவரது முயற்சி தோற்ற போதிலும், நாட்டில் சர்வாதிகாரத்தை ஒழித்துக்கட்டி ஜனநாயக ஆட்சிக்கு வித்திட்ட ஒரு நிகழ்ச்சியாக அந்தக் கொலை முயற்சி நிகழ்ச்சியை ஜெர்மானியர் கருதுகின்றனர்.

இருபது ஆண்டுகளுக்கு முன் - 1944 ஜுலை 20-ம் தேதி ஜெர்மன் இராணுவத் தளபதிகளில் ஒருவரான கர்னல் கிராப் வான் ஸ்டாபன்பர்க் என்பவர் ஹிட்லரை அவருடையத் தலைமைக் காரியாலயத்திலேயேக் கொலைசெய்ய முயற்சி செய்தார். அம் முயற்சி தோற்றது. ஹிட்லர் காயத்துடன் தப்பிவிட்டார்.

இச்சதியில் பங்கு கொண்டவர்கள் மிகக் கொடுமையுடன் நடத்தப்பட்டார்கள். இவர்களில் பெரும்பாலோருக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது. ஜெர்மன் இரகசியப் போலீஸார் அவர்களுடைய குடும்பத்தினரை சிறையில் அடைத்து துன்புறுத்தினர்.

ஹிட்லரை ஒழிக்கும் இந்தச் சதியில் அரசியல்வாதிகள், மாஜி தொழிற் சங்க அங்கத்தினர்கள், அதிகாரிகள், கத்தோலிக, பிராடெஸ்டண்ட் கிறிஸ்துவ மதத்தினர் உட்பட ஏராளமான ஜெர்மானியர் ஈடுபட்டிருந்தனர். எனினும் இச் சதி வெற்றிபெறவில்லை.

ஆனால் இந்தச் சம்பவங்கள் இன்று சரித்திரத்தின் ஒரு பகுதியாகி விட்டன.

கிழக்கு பிரஷ்யாவில் இருந்த அந்த சதி நடந்து ஹிட்லர் தப்பிய இடம் அடியோடு அழிக்கப்பட்டது. ஆனால் அந்த அறையிலிருந்த பெரிய மேஜை, குண்டுகளைத்தாங்கி ஹிட்லர் மீது படாமல் காப்பாற்றி விட்டது.

அச்சமயம் பெர்லினில் ஹிட்லர் ஆட்சியை எதிர்ப்பவர்கள் புது அரசாங்கம் ஒன்றை அமைக்க ஏற்பாடுகள் செய்து கொண்டிருந்தனர். கட்சியின் சர்வ வல்லமை பொருந்திய ஸ்தாபன சக்தியான இராணுவம் அரசாங்கப் போலீஸ் இவைகளின் கடுமையானக் கண்காணிப்பு இவை காரணமாக இம்முயற்சிகள் எல்லாம் அம்பலமாகிவிட்டன.

1933 இல் ஹிட்லர் ஆட்சிக்கு வந்தவுடனேயே அவரைக் கவிழ்க்க ஒரு சதி நடந்தது. ஆனால் அச்சதியில் ஈடுபட்டிருந்த ஜனநாயக சக்திகள் ஒன்றுடன் ஒன்று போரிட்டுக் கொண்டிருந்ததால் மக்கள் ஆதரவின்றி அவர்கள் முயற்சி தோற்றது.

ஹிட்லருக்குப் பிறகு ஹிம்லர், கோயரிங், கெப்பள்ஸ் மற்றும் இதர நாஜி பெரும் புள்ளிகள் அதிகாரத்தைப் பெற்றனர். அதிகாரத்தை தங்களுடைய நலனுக்கே உபயோகிக்க அவர்கள் தயங்க வில்லை. சர்வாதிகாரம் ஆழ வேரூன்றியதுடன் ஜனநாயகம் அடியோடு நசுக்கப்பட்டு விட்டது. ஹிட்லருடன் சமரசமாகப் பேசி அவரை நேர்வழிக்குத் திருப்ப முடியும் என்ற நம்பிக்கை தகர்ந்தது. ஆனால் சுதந்திர வாழ்க்கை நடத்திய ஜெர்மானியர்கள் இந்த சர்வாதிகார ஆட்சியை ஏற்க உடன்பட வில்லை. இவர்களின் ஆதரவுடன் 1944 ஆம் ஆண்டுச் சதி உருவாகியது.

1944 ஜுலை 20-ம் தேதியன்று புது மாறுதல் ஏற்படுத்த முயன்றவர்கள் யார்? அவர்கள் தேசீய - சோஷலிஸ்டுகள் வருணித்தது போல பிற்போக்கான அதிகாரிகள் அல்ல. சமூகத்திலுள்ள எல்லாவித நபர்களும் அதிலிருந்தனர். அவர்கள் மிக இரகசியமாக தங்கள் திட்டத்தை நடத்திச்செல்ல வேண்டியிருந்தது.

1944 ஜுலை 20-ம் தேதியன்று நாட்டின் நலனைக் கருதி உயிர் முதல் எல்லாவற்றையும் தியாகம் செய்ய முற்பட்டனர். பழைய காலத்தில் இருந்த அடிப்படை உரிமைகள், மனச்சாட்சிப்படி நடந்து கொள்ளும் சுதந்திரம், மத சுதந்திரம், இஷ்டப்படி கல்வி கற்கும் சுதந்திரம், மனிதக் கௌரவத்தை நிலைநாட்டும் உரிமை இவை எல்லாம் ஏற்படவேண்டும் என்று அவர்கள் கோரினர்.

தேசீய — சோஷலிஸ்டுகளால் ஜெர்மனி தனித்து நிற்கும்படி செய்யப்பட்ட நிலைமை மாறவேண்டும் என்றும் பெடரல் அடிப்படையில் ஐரோப்பிய நாடுகளுடன் ஐக்கியம் ஏற்பட வேண்டும் என்றும் இவர்கள் விரும்பினர். ஜெர்மனி சர்வாதிகார வீழ்ச்சிக்குப் பின் புது சுதந்திரம் ஏற்படும் வரை தடைகளை ஏற்று சில காலம் இருக்க வேண்டியிருக்கும் என்பதை "சதி" செய்தவர்கள் அறியாமலில்லை.

இக் கொள்கைகளில் பெரும்பாலானவை ஐந்து வருஷங்கள் கழித்து புது அரசியல் உருவாக்கப்பட்ட போது அதில் இடம் பெற்றது. இந்த அரசியல் திட்டம் ஒவ்வொரு ஜெர்மன் பிரஜைக்கும் பத்து வருடங்களாக தேசிய — சோஷலிஸ்டுகளால் மறுக்கப்பட்ட சுதந்திரங்களை மீண்டும் அளித்தது. இதற்கான விதை 1944 ஜுலை 20 ஆம் தேதி போடப்பட்டது.

எனவே இந்த நாளை ஜெர்மானியர் ஆண்டுதோறும் கொண்டாடி வருகிறார்கள்.

★




Edited and Published by its owner Sri. Triloka Sitaram & Printed by him at his Shivaji News printers, 24-A, Theradi Bazaar, Tiruchy-2.
Annual Subscription Including 4 Special numbers Rs. 10. Single copy : Twelve nP. ( Madras office : 12/2 Nallathambi Mudali St., Triplicane, Madras-5,